உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதரு வாணியை உள்நாடு"

மலர் சு | ஸ்ரீமுக ஆண்டு வைகாசித் திங்கள் 1933 ஞு மேமீ | இதழ் ரு

## கொக்கரக்கோ

[பத்திராசிரியர்]

[இது, யான் சாத்தூர் தமிழ்ச்சங்க ஆண்டு விழாவில் 28-12-32ல் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.]

அவைத் தலைவரவர்களே, எனது அருமைச் சகோதரி சகோதரர்களே!

சென்ற ஆண்டு விழாவிலே "கா கா கா" என்பது பற்றிப் பேச எனக்கு விடை கொடுத்த நீங்கள் இவ்வாண்டுவிழாவிலே "கொக்கரக்கோ" என்பது பற்றிப் பேசுமாறு பணித்துள்ளீர்கள். "கொக்கரக்கோ" என்பது கோழியின் ஒலி. கோழியினிடம் பல நற்குண நற்செய்கைகளை நாம் காணலாம். தனது முட்டைகளின் மீதமர்ந்து அடை காத்து குஞ்சு பொரிக்கும்படி செய்வது, தன் குஞ்சுகளைச் சிறகுள்ளடக்கி பருந்து, கழுகு முதலிய வலிய பறவைகளுக்கிரையாக்காமல் காப்பது முதலிய அன்புச் செயல்கள் கோழிக்குண்டு. கோழிக்குத் தைரியமும் நிரம்பவுண்டு. இரண்டு சேவல்கள் சண்டையிடும்போது பார்த்தால் இது நன்கு விளங்கும். பண்டைக்காலத்தில் ஒரு சோழ ராஜன் தனது யானைமீதூர்ந்து செல்லுங்கால், ஓரிடத்தில் ஒரு கோழியானது உயரப் பறந்துவந்து தனது யானையின் தலையை அடிக்கடி கொத்தியதைக் கண்டு வியப்புற்றான். அந்நிலத்திற் பிறந்த கோழிக்கே அவ்வளவு தைரிய மிருந்தால் அவ்வூர் மக்கள் எவ்வளவு தைரியசாலிகளாயிருப்பார்களென்று எண்ணி அவ்வரசன் அவ்வூரைத் தனது இராசதானித் தலைநகராக்கினான். அஃதே இப்போது திரிசிராப்பள்ளிக் கடுத்துள்ள உறையூர்

என்னும் நகரம். உறைப்பு மிகுந்ததாலும் சோழன் உறைந்ததாலும் இவ்வூர் உறையூராயிற்று போலும். பண்டை நூல்களில் இவ்வூருக்குக் "கோழி" என்ற பெயர் வழங்கப்பட்டுள்ளது.

கோழிக்கு நுட்பமான ஒளி யுணர்ச்சியுண்டு. அருணோதய காலத்தில் கோழி கூவுகின்றதைக் கிராமவாசிகள் நன்கறிவர். தற்கால நாகரிகத்திலுள்ள அலாரம் கடிகாரங்களைப் போல (Alarum Clocks) கோழியும் கிராமங்களில் பயன்படுகிறது. கோழியின் குரலைக்கேட்ட பிறகே ஏனைய புள்ளினங்கள் எழுந்து கூவுதலை வாதவூரடிகள் "கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்" என்று அழகுறக் கூறினர். இம்மட்டில் கோழியைப்பற்றிய பேச்சை நிறுத்தி இனி அதன் ஒலியைப்பற்றி ஆராய்வாம்.

"கொக்காக்கோ" என்பது கோழியினது இயற்கையான ஒலி. இதை ஒரு சிறிது மாற்றி "கொக்கறுகோ" எனக்கொண்டு கொக்கு+அறு+கோ எனப் பிரித்து கொக்கு (=மாமரம்) உருக்கொண்டு வந்த சூரபன்மனை அறுத்த (=சம்ஹாரம் செய்த) கோ (=அரசன்) அல்லது முருகக் கடவுள் என்று முருகக் கடவுளையே கோழி கூப்பிடுகின்றதென திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை எம். ஏ., அவர்கள் தாமியற்றிய சேவற் பாட்டில் நயம்படக் கூறியுள்ளார்கள். கொடியாக அமர்ந்துள்ள கோழி தனது அரசனாகிய குமரவேளைக் கூப்பிடும் பொருத்தமும் இதன்கண் உள்ளது நோக்கத்தக்கது.

இனி கொக்கரக்கோ என்ற தொடரைப் பதம் பிரித்து ஆராய்வாம். கொக்கு+அர+கோ என்ற மூன்று சொற்கள் இதில் உள்ளன. கொக்கு என்பது ஒரு பறவை. அதன் மூக்கும் கால்களும் சிவப்பாகவும் ஏனைய உறுப்புகள் வெள்ளையாகவும் இருக்கும். சத்திமுத்தப் புலவர்,

"பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்"

என்ற வருணனையை நோக்குக. கொக்கின் சுபாவம் ஒன்று கவனிக்கத்தக்கது. ஒரு குளத்தில் ஒரு தாமரையிலையில் ஒற்றைக்காலில் நின்று கண்ணை மூடிக்கொண்டு "ஓடுமீனோடி உறுமீன் வருமளவும், வாடியிருக்குமாம் கொக்கு" என்பதற்கேற்பப் பக்குவமான மீன் வருமளவும் கொக்கு காத்திருக்கும். கொக்கு கண்ணைமூடித் தவம் செய்கிறதென்றும், கொக்கின் தலையில் வெண்ணெய் வைத்துப் பிடியென்றும், நான் என்ன கொக்கா என்றும், சாதாரண மக்கள் கூறும் வழக்கத்தையும் நாம் அறிவோம். அதாவது கொக்கு விழிப்பின்றி உறங்குவதாகவும் கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்தால் தலையிலுள்ள மூளைக் கொதிப்பால் வெண்ணெய் உருகிக் கண்ணில் பாய்ந்து கண்ணை யடைத்துவிட்டபின் கொக்கைப்பிடித்து விடலாமென்றும் மக்கள் எண்ணுவது வழக்கம். ஆனல் உறு மீன் வருமளவு மட்டும்தான் கொக்கு வாடியிருக்குமென்பதைச் சாதாரண மக்கள் உணரமாட்டார்கள். கொக்கின் தலையில் வெண்ணெயை வைக்குமுன் அது பறந்துவிடுமென்றும், வெண்ணெயை வைக்கும் வரையில் அது பறவாதிருந்தால் அப்போதே அதைப் பிடித்தும் விடலாகுமென்றும் மக்கள் உணர்வதில்லை.

அரன் உலகுக்கு முழுமுதற் கடவுள் பாசத்தை அரிப்பவன் அரன். அவனே கோ(=பதி) ஏனயவெல்லாம் பசுபாச வர்க்கத்தைச் சேர்ந்தவை. அவ்வரனுகிய கோ சில விஷயங்களில் கொக்கை ஒத்திருக்கிருன். பவளம் போல் மேனியிற் பால் வெண்ணீறுடைமையால் அரனுக்கும் செம்மையும் வெண்மையும் பொருந்திய கொக்குக்கும் நிறவொற்றுமையுண்டு. ஒற்றைக் காலைநீட்டி மற்றைக் காலை மடக்கிக் கண்மூடித் தவமிருக்கும் கோலமுடைய கொக்குக்கும், அஃதே போல் ஒருகால் நீட்டி ஒரு கால் மடக்கி கண்மூடிக் கல்லாலின்கிழ்த் தவக்கோலமுடைய தென்முகக் கடவுளாம் அரனுக்கும் நிலையொற்றுமையு முண்டு. பக்குவமில்லாத மீன்களைப் போகவிடுத்துப் பக்குவியாகிய மீனை யுட்கொண்டு மீனின் அப்பிறப்பையறுக்கும் கொக்குக்கும், பக்குவமில்லாத ஆன்மாக்களைப் போகத்தில் விடுத்துப் பக்குவியாகிய ஆன்மாவை ஆட்கொண்டு அவ்வான்மாவின் எப்பிறப்பையும் அறுக்கும் அரனுக்கும் தொழில் ஒற்றுமையு முண்டு. இவ்வாறு மேலும் மேலும் சிந்தித்துச் செம்பொருள்கள் பலவற்றைக் "கொக்கரக்கோ" என்ற தொடரில் காணலாம்.

எனவே, பொருட் செறிவுடைய இம்மந்திரத்தை அருணேதயத்திலேயே கோழியானது ஆன்மாக்கள் (அறியாமைத்) துயில்விட்டெழு மாறு கூவிக் கூவி ஓதுகின்றது. மக்களோ ஞானச் சுடர் கொளுத்தும் இக்கோழியைத் தங்கள் வயிற்றுச் சுடரிலிட்டுக் கொளுத்துகிருர்கள். (=கோழியை உணவாக அருந்துகிருர்கள்.) என்னே! இவ்வுலகின் கொடுமை!

கம்பன் வீட்டுக்கட்டுத் தறியும் கவிபாடும் என்பது முதுமொழி. அஃதேபோல் இச்சங்க மேடையின் மேல் கால்வைத்த சேர்க்கை விசேஷத்தால் "கொக்கரக்கோ" என்ற ஒலியில் இத்தகைய அரிய பொருள்கள் எனது சிற்றறிவிற்குத் தோன்றின. இவற்றை உங்கள் ஆராய்ச்சியில் வைத்து குணமுள்ளவற்றை மட்டும் கொள்ளுமாறு வேண்டுகிறேன். இத்துணை நேரம் என் புன் மொழிகட்குச் செவிமடுத்த உங்கள் பெருங்கருணைக்கு எனது மனமார்ந்த வந்தனம் உரியதாகுக.

"கோக்கின் தூவலுங் கூவிளங் கண்ணியும்
மிக்க வெண்தலை மாலை விரிசடை
நக்க ஞகிலும் நாரையூர் நம்பனுக்
கக்கி ஞரமும் அம்ம அழகிதே"

---

# வேட்டுவன் ஆம் அப்புழு

[ஆ. மாணிக்கம்]

மேற்போந்த சொற்ருெடர் ஆசிரியர் மெய்கண்ட தேவரியற்றி யருளிய சிவஞானபோத நூலின்கண் முதற் செய்யுள் இரண்டாம் பகுப்பின் மேற்கோள் இரண்டாவது வெண்பாவிலுள்ளதாகும். புழு குளவியாக மாற்றப்படும் இவ்வரலாறு ஏனைய கொள்கை யுடையாரும் தத்தம் நூல்களில் எடுத்தாண்டு தத்தம் கருத்துப் பொருள் நிறுவியுள்ளனர். சித்தாந்தம்

மலர் இரண்டு இதழ் பன்னிரண்டில் இப்பொருள் பற்றிய கட்டுரை யொன்று எழுதிய திருவாளர் எ. எம். முத்தைய்ய நாட்டாரவர்கள் இக்காலத்துப் பூச்சி நூல் வல்லார்களின் கருத்துக் கிணங்கவே, ஆசிரியர் மெய்கண்டாரும் அருணந்தி சிவமும் சிவ ஞான முனிவரும் மெய்யுரைத் தேற்றிப் போயினர் என்று தம் பொருள் நாட்டி யுரைத்தனர். அன்றியும் மேற்படி கட்டுரையி னிறுதியில் திரு. நாட்டாரவர்கள் “ இனி இவ்வேட்டுவனின் இயற்கை நூல் கண்ட சரித்திர உண்மையினின்று சைவ சித்தாந்த முடிபுகளுடன் தொடர்புறக் கண்ட உண்மை யாதேனுமுளதோ என்று ஐயுறும் சில ஆழ்ந்த சைவர்கள் முன்னோர் கண்ட வுரைக்கு மாறு காண்டல் முறையற்றதுடன் கொள்ளத் தக்கதன்றென்றும் கூறுவராதலின் அன்னார் ஐயங்களை நீக்குவான் வேண்டி இவ்வேட்டுவனின் சரிதத்தைச் சைவநூல் முடிபு கொண்டு ஆராய்ந்து இரண்டிற்குமுள்ள தொடரை அடுத்த கட்டுரையில் விளக்குவான் ” என்று தந்துணிபு நிலையிட்டவர் நாளிதுவரை விளக்கஞ் செய்யாமலே வாளா ஒழிந்தனர். நிற்க.

அண்மையில் திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களால் எழுதப்பட்டு சமாஜத்தால் வெளிப்படுத்திய “ மெய்கண்டாரும் சிவஞானபோதமும்” என்னும் நூலில் மேலைச் சொற்றொடர்க்குப் பொழிப்புத் திரட்டும் வழி “குளவியா லிடப்பட்ட புழு, குளவியாதல் போல ” என்று திரட்டப் பட்டிருக்கின்றது. இத்திரட்டில் உள்ள “இட” என்னுஞ் சொல்லானது திரு. நாட்டாரவர்களின் கட்டுரைப் பொருளுக்குப் பெரிதும் அரணாவதே என்பது எவர்க்கும் எளிதில் விளங்கக் கூடியதே யாகும். எவ்வாறெனில் திரு. நாட்டாரவர்கள் வேட்டுவனென்னுமிக் குளவி முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும் என்றும் அம்முட்டையினின்றும் வெளிப் போந்த குஞ்சின் தோற்றமே புழுவடிவென்றும் அது (புழு) நாளடைவில் வளர்ந்து மாறுதலடைவதே குளவி வடிவென்றும் கட்டுரைக்கின்றார்கள். திரு பிள்ளை யவர்களின் “இட” என்னுஞ் சொல் திரு நாட்டாரவர்களின் கருத்துப் பொருளில் ஒற்றுமை யுறுவதை உலக வழக்கினும் குட்டிப்போட்டது, முட்டையிட்டது என்பதின் வைத்துணர்க. விளக்கம் வேண்டின் “குளவியாலிட” எதைக் குளவியாலிட? முட்டையை எனக் கொள்க. எனவே, குளவியால் முட்டையிடப்பட்டுத் தோன்றிய புழு உருமாறி குளவி வடிவடைதல் என்பதே திரு. பிள்ளையவர்களின் திரட்டிற்குப் பொருளாகும். திரு. பிள்ளையவர்களின் கருத்து இதனின் வேறுபட்டதென்பது திரு. பிள்ளையவர்களே குறிப்பில் “வேட்டுவன் குளவி. குளவி ஒரு புழுவைத் தன் கூட்டில் வைத்துக் கொட்ட, அப்புழு, குளவி வடிவடைதல் என்பது கருத்து ” என்றாராகலின். இங்கு“ தன் கூட்டில் வைத்து ” என்னுஞ் சொற்பொருள் ஆழத்தையும் “ குளவியாலிட ” என்னுஞ் சொற்பொருள் ஆழத்தையும் கருதிப் பார்க்கவும். நிற்க.

இக்கருத்து வேறுபாடு பண்டைய உரையாசிரியர்களுக்கும் உண்டென்றே தெரிகிறது. சிவஞான சித்தியாருக்கு உரைசெய்த அறுவரில் ஞானப்பிரகாச ரொருவர் மட்டுமே குளவி புழுவைத் தன்னின மாக்கு

மென்ற கொள்கையை ஒப்புக் கொள்ளா தொழிந்தார் என்று மறைத்திருவாளர், மறைமலையடிகளின் ஞானசாகர முதற்பருமம் ஆறுவது இதழில் "பிரமர கீடநியாயம்" என்னுந் தலைப்பில் 'மா. ஜி.' என்ற கைச்சாத்திட்டு ஒருவர் எழுதியிருக்கின்றார். 'நவசக்தி' ஆசிரியர் திருவாளர் - திரு. வி. கலியாண சுந்தர முதலியார் அவர்களும் சென்னைப் பூமகள் விலாச அச்சுக்கூட சொந்தக்காரர் விருப்பத்திற் கிணங்கப், பட்டினத்தார் திருப்பாடற் றிரட்டிற்கும் "பத்திரகிரியார்" புலம்பலுக்கும் வரைந்த விருத்தியுரையில் குளவியால் எடுத்து வைக்கப்படும் புழு, குளவிக்கும் அதன் குஞ்சுகளுக்கும் உணவாகிறது" என்று எழுதியிருக்கிறார்கள். ஆகவே, இக்கருத்து வேறுபாடுகள் பழைமையே ஆயினும் புதுமையே ஆயினும் இதன் உண்மைப் பொருள் வெளிப்படல் வேண்டும். ஆழ்ந்தகன்று ஆராய்ந்து அறிந்த சான்றோர் உண்மை வெளிப்படுப் பாராக.

# பொடியிடிப்போம் வாருங்கள்

[அ. சிதம்பரநாதன் செட்டியார், பி. ஏ.]

பொடியிடிப்போம் வாருங்கள்! ஏ! மாவடுவின் பிளப்பை ஒத்த கண்களையுடைய பெண்களே! வாருங்கள்! வாள்போன்று கூரிய விசாலமான கண்களையுடைய பெண்களே! வாருங்கள்! கருங் குவளையை யொத்த பெரிய கண்களையுடைய மடந்தை நல்லீர் வாருங்கள்! புன் சிரிப்புப் பூத்த செவ்வாயை யுடையோரே! வாருங்கள்! செவ்வரி பரந்த கண்ணிரண்டையும், பொற்றொடி யணிந்த தோளிரண்டையும் உடைய மடந்தை நல்லீர்! வாருங்கள்! மின்னலை யொத்த இடையையும், செம்பவளத்தை ஒத்த வாயையும், மேகத்தை யொத்த கண்ணையும், முத்தை ஒத்த பற்களையும், கிளியினத்தை ஒத்த மென்மொழியையும் உடைய நங்கைகாள்! வம்மின்! ஆராய்ந்து எடுத்த ஆபரணங்களையே யணிந்துள்ள அரிவையரே! வம்மின்! பொடியிடிப்போம் வம்மின்!

பொடியிடிக்குமுன் ஒன்று செய்யவேண்டும். அஃதென்னை? நல்ல முத்து மாலைகளையும் மணி வடங்களையும் பூமாலைகளையுங் கொண்டு இடத்தை அலங்காரஞ் செய்வோம். பாலிகைகள் வைத்துப் பூரணகும்பம் எடுப்போம். நல்ல சாம்பிராணித் தூபம் போடுவோம். தீபங்கள் வைப்போம். சத்தியையும், சோமியையும், பூமகளையும், நாமகளையும் பல்லாண்டிசைக்கும்படி வேண்டுவோம். சித்தியையும், கௌரியையும், பார்வதியையும், கங்கையையும் வந்து கவரி வீசும்படி வேண்டிக் கொள்வோம்.

இனி, பொடியிடிக்கலாம் வாருங்கள். வாருங்கள், போவோம். ஓ! இதென்ன காட்சி! தேவர்களெல்லாம் திரண்டு வருகிறார்களே! நம்முடன் போட்டிக்கு அன்றோ வருகிறார்கள் இவர்கள்! இவ்வுலகில் நாமெல்லோரும் உலக்கை பல ஓங்க ஆரம்பிக்கின்றோம்; உரலோ நமக்கே போதாதென்று கலங்குகின்றோம். இச்சமயத்தில் நமக்குப் போட்டியாக இவர்கள் வருகிறார்

களே! இந்திரன் முதலான இத்தேவர்களெல்லாம் நமக்குப் பின்பல்லது இடிக்க விடலாகாது. காரணம், அவர்கள் நம்மோடு இடித்து உய்தி பெறலாகாது என்பதல்ல; மற்று, நம்மைவிடப் பெரியவர்களான அவர்கள் அவனை அடையவும் மகிழ்விக்கவும் வழிகள் பல அறிவார்கள் அன்றோ? ஆனால், பிரமா விஷ்ணு ஆகிய இருவரையும் மாத்திரம் வேண்டுமானால் நம்முடன் சேர்த்துக் கொள்ளலாம். பாவம்! அவர்கள் இருவரும் அடிமுடி தேடி அலைந்தாரன்றோ?

வாருங்கள், இடிப்போம். ஒஹோ! யாருக்குப் பொடியென்று கேட்கிறீர்கள்? இதோ கூறுகிறேன். கொன்றைப் பூமாலையை யணிந்த நீண்ட சடையையுடைய எம்பிராற்கு; ஆணவம், கன்மம், மாயை ஆகிய முப்புரத்தை எரித்தவற்கு; சப்தமிடும் கங்கையையும் ஒலமிடும் பாம்பையும் அணிந்துள்ள சடைத் திரளையுடைய எம் நாதற்கு; பாடகம் என்னுங் காலணியை அணிந்த மெல்லடியையுடைய மங்கையின் பங்கனும், ஆடகப் பொன்மலை என்று சொல்லலாம்படியுள்ள கோவுமாகிய எம் பராபரற்கு.

இன்னும் புரியவில்லையா? அவர்தான் அந்தரர்கோன்; அயன்றன் பெருமான்; ஆழியான் நாதன்; நல்வேலன் தந்தை; உமையாள் கொழுநன். அவர்தான் நாதன், ஈசன், முக்கண்ணப்பன், ஐயன், அணிதில்லை வாணன், அம்பலத்தாடினன். அவர்தான் வேதமும் அதிற் சொல்லப்பட்ட வேள்வியுமாயினர்; மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினர்; சோதியும் இருளுமானர்; துன்பமு மின்பமும் ஆயினர்; பாதியும் முற்றும் ஆயினர்; பெத்தமும் முத்தியும் ஆயினர்; ஆதியும் அந்தமும் ஆயினர்.

இப்பொழுது தெரிந்ததன்றோ யாருக்கு என்று? ஆனால் என்ன பாடிக்கொண்டு இடிப்பது என்று சந்தேகம் வந்து விட்டதோ? அதையுந் தீர்த்து விடுகிறேன். வேறென்ன பாடுவது? அவனைத்தான் பாடவேண்டும். அத்தனே, ஆறனே, அம்மானே, ஐயனே, ஐயர்பிரானே, மெய்யர் மெய்யனே, மையமர் கண்டனே, வானநாடர் மருந்தே, மாணிக்கக் கூத்தனே, மேதகு தென்னனே, பெருந்துறையானே என்றென்று அழைத்துப் பாடுவோம். எம்முடை ஆரமுதே, எங்களப்பனே, எம்பெருமானே, ஞானக் கரும்பின் தெளிவே, பாகே, நாடற்கரிய நலமே, நந்தாத் தேனே, பழச்சுவையாயினனே, சித்தம் புகுந்து தித்திக்கவல்ல கோனே, பிறப்பறுத்து ஆண்டு கொள்ளுங் கூத்தனே என்றென்று நாத்தழும்பேறப் பாடுவோம். தேசமெல்லாம் புகழ்ந்தாடும் கச்சித் திருவேகம்பனே, உமாதேவிக்குக் கணவனும் மகனும் தகப்பனும் தமையனும் எல்லாமும் ஆயிருக்கும் எமது தலைவனே என்று சொல்லிப் பாடுவோம். அடியோங்களை ஆண்டுகொண்டு பாதமலர் சூடத்தரும் மலைக்கு மருகனே! என்று மகிழ்ந்து பாடுவோம்; பாடிக்கொண்டு பொடியிடிப்போம் வாருங்கள்.

வாருங்கள், வாருங்கள்; இடித்திடலாம் வாருங்கள். இப்படியா இடிப்பது? எல்லோரும் சுந்தர நீறு அணிந்துகொண்டீர்களா? சரி. தரையை நன்றாகச் சுத்தஞ் செய்தீர்களா? நல்லது. அப்படி தூய பொன்னைச் சிந்துங்கள்; இப்படி நிதிகள் எல்லாம் பரப்புங்கள்; கொடிகளை அங்குக் கட்டுங்கள்;

விளக்குகளை இங்கு வையுங்கள்; உலக்கை யெல்லாம் மாசணியுங்கள்; உரலுக்குக் காம்பு போடுங்கள்; கூவுமின்கள், குனிமின்கள்; தொழு மின்கள். அடியவர்கள் நின்று நிலாவுக என்று வாழ்த்துங்கள். கை வளை யார்ப்பவும், தோள்வளை ஆர்ப்பவும் இனிப் பொடியிடிப்போம். தொண்டர் கூட்டம் ஒருபால் சப்தமிடவும், நாம் பொடியிடிப்போம். வரிவளை யார்ப்பவும், வண்கொங்கை பொங்கவும் பொடியிடிப்போம். தோளின் பக்கங்கள் அடைந்திலங்கப் பொடியிடிப்போம். நம் பொன்னகை களெல்லாம் அசைந்து ஒளிவீசும்படி பொடியிடிப்போம். சங்கு ஊதவும், சிலம்பு ஆர்ப்பவும், பொடியிடிப்போம். நம் தாழ்ந்த கூந்தலைச் சுற்றியுள்ள மாலைகள் ஆடும்படி பொடியிடிப்போம். கொவ்வைப்பழம் போன்ற வாயி தழ்கள் துடிக்கும்படி பொடியிடிப்போம். நீர்மலி வேணியனுடைய கழற்கே பொங்கிய காதலிற் கொங்கை பொங்கும்படி பொடியிடிப்போம்.

இடிப்போமே இடிப்போம்; பாடிக்கொண்டு இடிப்போம். நம்மை யாட் கொண்டு பணி கொண்டவாற்றைப் பாடிப்பாடி இடிப்போம். சோத்தெம்பி பிரான் (சிவந்த எம்பிரான்) என்று சொல்லிச் சொல்லி யிடிப்போம். நாயிற் கடைப்பட்ட நமக்கு நாண்மலர்ப் பாதங்கள் காட்டியவண்ணம் பாடிப்பாடி யிடிப்போம். சிவலோகம் பாடி யிடிப்போம். உய்ந்தே மென்று இடிப்போம். தொண்டரொடு நம்மைக் கூட்டுவாரென்று இடிப்போம். விண்ணவர் கன விலுங் கண்டறியாச் செம்மலர்ப் பாதங்களை நமக்கு நனவில் காட்டும் திறத்தை வியந்து இடிப்போம். நமக்குச் செல்வச் சேவகம் புரியும் அவன் இருக்கக் குறை என்னவுண்டு என்று இடிப்போம். அவன் தலையிலுள்ள கொன்றை மாலையைப் பாடி யிடிப்போம். சடையிலுள்ள பிறையைப் பாடி யிடிப்போம். விண்டுவாகிய ரிஷபத்தைப் பாடியிடிப்போம். அவன் வலக்கை யுள்ள சூலம் பாடி யிடிப்போம். யாவரும் உய்ய அன்று நஞ்சுண்டதைப் பாடி இடிப்போம். அவன் அறக்கருணையைப் பாடி இடிப்போம்! மறக்கருணை யைப் பாடி இடிப்போம். பிரமன் தலையைக் கொய்ததைப் பாடி இடிப்போம். சூரியன் பல்லைப் பிடுங்கியதைப் பாடி இடிப்போம். கஜமுகாசுரனைக் கொன்று யானையுரி போர்த்ததைப் பாடி யிடிப்போம். மார்க்கண்டேயன் எனும் அடி யான் பொருட்டு யமனைக் காலால் உதைத்ததைப் பாடி இடிப்போம். திரி புரங்களைச் செற்றதைச் சொல்லி இடிப்போம். ஏழை யடியோமை யாண்டு கொண்ட நயத்தைப்பாடி இடிப்போம். நின்றாடி ஆடி யிடிப்போம். பாடிப்பாடி இடிப்போம். தொண்டர்கள் வாழுந் தில்லையைப் பாடி யிடிப் போம். சிற்றம்பல முடையானைப் பாடி யிடிப்போம். அவர் அணிந்துள்ள அரவங்களைப் பாடி இடிப்போம்.

இடிப்போமே, இடிப்போம். உரலில் போட்டு இடிப்போம். உலக்கை கொண்டு இடிப்போம். வலக்கைகொண்டு இடிப்போம். எந்த உரல், எந்த உலக்கை என்று சந்தேகிக்கிறீர்கள்? வையகமாகிய உரலில், மாமேருவாகிய உலக்கையை நாட்டி, உண்மை என்னும் மஞ்சளை நிறையப்போட்டு, இடிப் போமே, இடிப்போம். என்ன! விளங்கவில்லையா? உலகமெங்கும் மகா மேரு பரியந்தம் உண்மை யன்பைக் காட்டுவோம், வாருங்கள்; வாருங்கள்.

எதற்காக இந்தப் பொடி இடிப்பது என்று கேட்கிறீர்கள்? நமது தலைவனும், கூத்தனும் ஆகிய எம்பிரான், தேவியும் தானுமாக வந்து நம்மை ஆட்கொள்ளும் பொருட்டன்றோ? பாச வினையைப் பறித்து நிற்கலாம் என்றன்றோ நான் இங்ஙனம் அழைப்பது?

"வாருங்கள், வாருங்கள், பொற்சுண்ணம் இடிப்போம் வாருங்கள்" என்று இங்ஙனமாக மாணிக்கவாசகர் அழைக்கின்றார்.

அதோ பாருங்கள்! அவர்களெல்லாம் பொடி இடிக்கிறார்கள். அவர்களுடைய முத்தணி கொங்கைகள் ஆடுகின்றன; கூந்தலில் மொய்க்கும் வண்டினங்கள் ஆடுகின்றன. செங்கயற்கண்ணினின்று நீர் தாரை தாரையாய்ச் சொரிகிறது. அவர்களது சித்தம் சிவனொடும் ஆடுகின்றது. அவர்கள் பித்துப் பிடித்தாற்போல் எம்பிரானொடும் ஆடுகின்றார்கள். அவரைப் போலன்றிக் கோன்னே அப்பால் நிற்கின்றார்களே அவர்கள் தான் இனிப் பிறப்பார்கள் எனத் தோன்றுகிறது. ஆ! அத்தனும் கருணையால் அவருடன் அங்கு ஆடுகின்றாரே!!

---

## சமயம்*

[இரா. கு. நல்லகுற்றாலம் பிள்ளை, ஸ்ரீ வில்லிபுத்தூர்]

நாம் வளரும் ஜீவ வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். நமது உள்ளம் மேலளந்த வாரியாக ஓடும் நினைப்புகளுக்கும் ஆழ்ந்த நினைப்புகளுக்கும் உறைவிடமாயிருக்கிறது; எவ்வகை நினைப்பில் பழகுகிறோமோ அவ்வகை நினைப்பிலேயே நமது காலத்தை யெல்லாம் கழிக்கலாம்; நாம் நம் வாழ்நாளை முன் யோசனையோடு சுகமாகவும் கழிக்கலாம்; அச்சத்தால் சதா கலவரப் பட்டுக் கொண்டு மிருக்கலாம்; நமது உள்ளம், எல்லாம் அனுகூலத்திற்குத் தான் என்னும் உணர்ச்சியால் திடப்படுகிறது; எல்லாம் தீமைக்குத்தான் என்னும் உணர்ச்சியால் உள்ள பலமும் குறைகிறது; தீமையைப் பற்றிய நமது அறிவும் வெகு சொற்பமாயும் அடிமை அறிவாயு மிருக்கிறது; நாம் நன்மையோ, தீமையோ நம் பிரயத்தனத் தளவில்தான் பிறக்குமென்று நினைக்கிறோம்; சுயநலம் ஒழிவதற்குத் தக்கதாவே நன்மையின் வளர்ச்சி இருக்குமென்றும் நாளடைவில் தெரிகிறோம். நாம் கோணியும் குறுகியும் ஈர்த்துச் செல்லும் நினைப்புகளால் சங்கடப் படுவோர் பலரைப் பார்க்கலாம்; ஆனால் உயர்ந்த உணர்ச்சிகளுக்குத் தாழ்ந்த உணர்ச்சிகளும் உபகாரமான முயற்சிகளுக்குக் கேடுகளை சூழ்கின்ற தூண்டுதல்களும் அடிபணிந்து நல்லவை ஓங்குகின்ற காலத்திலேதான் ஒருவனிடம் நாம் அமைதியைப் பார்க்கலாம்; கொலைகளின் உண்மை கற்சுவர்களைப் பிளந்தும் வெளிவரும்; திருடிச் சீமானானவனுமில்லை; பிச்சை யிட்டு ஏழையானவனுமில்லை.

---

* Based on the study of 'Varieties of Religious Experience' by William James.

இயற்கைப் பொருள்கள் எல்லாம் கெட்டு அழிந்து போகின்றன: செல்வப் பொருள்கள் பறந்து விடுகின்றன; கீர்த்தி வெறும் மூச்சாகப் போய் விடுகிறது; காதல் எய்ப்பாய் முடிகிறது; வாலிபமும், சுகமும், இன்பமும் மின்னல் போல் தோன்றி மறைகின்றன. தூசியாயும், ஏமாற்றமாயும் முடிகிற உலகப் பொருள்களிலிருந்து நன்மையான எதையும் நாம் எதிர் பார்ப்பதற்கில்லை.

இயற்கை நன்மை யென்பது திருப்தி தாராததாயும் மாயமாய் மறைவதாயுமிருக்கிறது; மனித வாழ்க்கையின் இடையிலேயே அது ஒன்றும் மிஞ்சாது போய் விடுகிறது; இடையிலே மிஞ்சு மென்றாலும் நாம் இறக்கும் போது சூன்யமாகி விடுகிறது.

நமக்கு இறப்போடு கலவாத ஒரு வாழ்க்கையும் சுகவீனத்தால் பாதிக்கப்படாத ஒரு சுகமும் என்றும் அழியாத நன்மையும், அதாவது இயற்கை நன்மையை யெல்லாம் கடந்த நன்மையும் தேவை.

கடவுளின் உண்மையைப்பற்றிய பல, நியாயங்களால் அதில் நம்பிக்கையுடையவர்களுக்கு திட புத்தி ஏற்படுவதையும், அதில் நம்பிக்கை இல்லாதவர்களுக்கு அவைகளால் பிரயோசன மில்லாததையும் நாம் அறிவோம். ஆனால் நாமெல்லாம் அறிவிலும் தொழிலிலும் பலவேறு அளவிற்கு உட்பட்டிருப்பதையும் நம்மில் குறைகள் கூத்தாடுவதையும் உணர்வோம். நமது உணர்ச்சி குறைவற்ற, நிறைந்த உணர்ச்சியோடு கலக்க விரும்புகிறது. நமது ஆன்ம உணர்ச்சி வளர வளர அதைத் தொடர்ந்ததும் அதற்கு உயரிய ஒரு பொருளின் உணர்ச்சி அவனுக்கு உண்டாய்க்கொண்டே போகிறது. அந்த உணர்ச்சியின் உறவு முதிர முதிர பயம் நீங்குகிறது; நான் என்ற முனைப்பு படிகிறது; சாந்தம் நிறைகிறது; தன் வாழ்க்கை எல்லாம் காருண்ய செய்கைகளுக்கான சந்தர்ப்பங்களாகவே தோன்றுகிறது; மற்றப்படி தூங்கும் சித்தம்கூட ஆத்மார்த்த முயற்சியில் திளைக்கிறது; அதன் பயனாக ஆத்மார்த்த சித்தியும் விளைகிறது. அத்தகைய உயரிய உணர்ச்சியின் திரள் அதி சிரேஷ்டமான உண்மையாக அன்றி வேறாக இருக்கக்கூடியதில்லை. அதற்கே கடவுள் என்பது இயற்கைப் பெயராகும்.

கடவுளோடு நெருங்கி உறவாடுவதே பிரார்த்தனையும் சமயமுமாகும். சமய வாழ்க்கையாவது ஒருவன் அந்தமில்லாத பொருளை நோக்கிச் செல்வதென்பதில்லை; அந்தமில்லாத பொருளுக்குள்ளாகவே செல்வதாகும்; அவ்விதம் செல்லும் ஆன்மா கடவுளின் அதி அற்புத சக்தியையும் அதனால் விளையும் ஆன்மார்த்த சித்தியையும் உணர்கிறது; கடவுளின் சாமீப்யம் நமது கவலையையும் பயத்தையும் ஓட்டுகிறது; நம்மை நேசித்து எக்காலத்தும் நம்மைக் காப்பாற்றும் அவரிருக்க, நமக்குக் கஷ்டம் ஒன்றும் நேரக்

---

கூடியதில்லை என்ற நம்பிக்கையும் ஏற்படுகிறது ; நாம் கோபத்தையும், தொந் தரவுகளையும், அவர் அருள் திடத்தால் நீக்கவேண்டும் ; நன்மையின் ஒளி களையே நாம் எப்போதும் காணவேண்டும் ; எல்லாம் அவர் சித்தம் என்ப தாக நம்முடைய வாழ்க்கையையே அவரிடம் உண்மையில் ஒப்படைத்து வாழும்போது அதற்கு முன்காணாத சுகங்களையும் காண்போம் ; கவலைக் கிடமே இராதென்பதல்ல. கவலையினால் வேதனை எதும் ஏற்படக்கூடியதில்லை. தீமை யெல்லாம் அதை நாம் எவ்விதமாகக் கொள்கிறோமோ அதற்குத் தக்கதாகவே தீமையாக முடியும். தீமைக்காக பயப்படுவதை விட்டு தீமையோடு சண்டை போட உற்சாகம் கொள்வோமானால் அதுவே நன் மையையும் பயக்கும். நமது கஷ்ட நஷ்டங்கள் நம்மை வீழ்த்தவிடாது. அவைகளை உதறித் தள்ளி உண்மை உலகத்தில் உலாவவேண்டும். நம் முடைய மனத்திரும்பலில் நம்முடைய குறைகளைப்பற்றிச் சிந்தித்துக்கொண் டிருத்தல் உதவாது ; அவைகளை யெல்லாம் மறந்து நன்மையான மார்க்கத்தி லேயே நமது அந்தக் கரணங்களை யெல்லாம் செலுத்தவேண்டும். அப்படி செய்யும்போது நமது சகிக்க முடியாத துன்பங்களும் நிலைத்த சுகமாக எளி தில் மாறிவிடக்கூடும்.

---

# திருஞானசம்பந்தர் பதிக அமைப்பு

(தொடர்ச்சி)

## 3. திருஞானசம்பந்தர் திருக்கடைக்காப்பும் அதன் நோக்கமும்

“சம்பந்தன் தன்னைப் பாடுவான்” என்பது சைவ வுலகில் வழங்கு மோர் சொற்றொடராம். ஏனெனில், அவர் 11-வது செய்யுள், தாம் பாடிய முன்னுள்ள பத்து செய்யுட்களைக் “கேட்போர் பயன்”, யாதென் பது காட்டுவதால், ஏதோ தற்புகழ்ச்சியைக் கருதிச் சம்பந்தர் தம் பதிகத் தின் ஏற்றங் காட்டுவது போல் விளங்கும். திருஞானசம்பந்தருக்கு தற் புகழ்ச்சி தகுமாயினும், ஆராய்ந்து நோக்குங்கால், அவ்வாறு தற்புகழ்ச்சி சற்றும் அதில் அவரெண்ணியதாகக் காணப்படவில்லை. தமது பதிகங்களை கடலை வாழ்வின்கண் ஈடுபட்ட மாந்தர் கவனியாது கொன்னே வாழ்நாளைக் கழிப்பது சாதாரண மென்றும், புண்ணியஞ்செய்த சிலரும் அதைக்கற்பது, முறைப்படி கற்று ஓதி உணராது, மேலோட்டமாகச் செல்வார்களே யென்று வருந்தியும், குழந்தைகளுக்கு உணவை ஊட்டுவதுபோல், தமது பதிகமாகிய அமுதத்தை ஊட்டுவான், தாய் தனது சேய்க்கு உணவுப் பொருள்களிவை யிவையென்றும், அவற்றின் சுவைகள் யிவையென்றும், உண்பதால் வரும்பலன் ஈதென்று முணர்த்துவதுபோல், ஆளுடைய பிள்ளை யாரும் தமது திருக்கடைக்காப்புச் செய்யுட்களில் பற்பல விதங்களாய் வரும் பயனை எடுத்துக் காட்டுவாராயினர். அவற்றின் விவரம் காண்போ மாக.

சம்பந்தர் 11-ம் செய்யுள், அப்பதிகத்தினை ஓதும் பயனை இருவகையிற் காட்டும். அவையாவன சம்பந்தர் "பாடல் சொல்லவல்லா"ருக்குப் புறத்தில் நிகழும் பயன்களைச் சில பதிகங்கள் கூறும். சில பதிகங்கள், அவற்றைக் கொண்டு சிவபெருமானை யேத்துமன்பாய் அகத்தில் நிகழும் பயனை விளக்கும். ஒவ்வொரு பதிகத்திற்குஞ் சிறப்பான பயன் ஒன்றுண்டு. அதையே சம்பந்தர் பதினோராவது செய்யுளிற் காட்டுகின்றார். அகத்தின்கண் உண்டாகும் பயனுவன : துயர் தீரல், வினைப்பற் றறுதல், சிவனடிப் பற்று, நிறைவளர் நெஞ்சம், ஞானம் முதலியன. அவை சில திருக்கடைக் காப்பில் காணலாம் :—

(1) துயர் தீரல்—(உ - ம்)

"கற்ற நன்மறை பயிலடி யவரடி தொழுகவினுறு
சிற்றிடை யவளொடு மிடமென வுறைவதோர் சேறைமேல்
குற்றமில் புகலியு ளிகலறு ஞானசம் பந்தன
சொற்றக வுறமொழி பவரழி விலர்துயர் தீருமே"

—திருச்சேறை - திருவிராகம் - பண் - சாதாரி. 11.

(2) வினைப்பற் றறுதல்—(உ - ம்)

"திண்ணமரும் புரிசைத் திருவ்வெண் டுறைமே யவனைத்
தண்ணமரும் பொழில்சூழ் தருசண் பையர்தந் தலைவன்
எண்ணமர் பல்கலையா னிசைஞானசம் பந்தன் சொன்ன
பண்ணமர் பாடல் வல்லார் வினையாயின பற்றறுமே"

—திருவெண்டுறை - பண் - பஞ்சமம். 11.

(3) சிவனடிப் பற்று—(உ - ம்)

"வாசமலி யும்பொழில்கொள் வண்திருவை யாற்றுள்
ஈசனை எழிற்புகலி மன்னவன்மெய்ஞ் ஞானப்
பூசுர னுரைத்ததமிழ் பத்துமிவை வல்லார்
நேசமலி பத்தரவர் நின்மல னடிக்கே"

—திருவையாறு - பண் - இந்தளம். 11.

(4) நிறைவளர் நெஞ்சம்—(உ - ம்)

"பிறை வளரும் முடிச்சென்னிப் பெரும்புலியூர் பெருமானை
நறை வளரும் பொழிற்காழி நற்றமிழ்ஞா னசம்பந்தன்
மறை வளருந் தமிழ்மாலை வல்லவர்தந் துயர்நீங்கி
நிறை வளர்நெஞ் சினராகி நீடுலகத் திருப்பாரே"

—திருப்பெரும் புலியூர் - பண் - காந்தாரம். 11.

(5) ஞானம் :—(உ - ம்)

"அருஞா னம்வல்லா ரழுந்தை மறையோர்
பெருஞா னமுடைப் பெருமா னவனைத்
திருஞா னசம்பந் தனசெந் தமிழ்கள்
உருஞா னமுண்டா முணர்ந்தார் தமக்கே"

திருவழுந்தூர் - பண் இந்தளம். 11.

புறத்தின்கண் எய்தும் பயனுவன : புகழ், இடர் நீங்கல், இம்மை மறுமையி லாட்சி, திருவளர்ச் செம்மை முதலியனவாம். அவை: பின்வரும் உதாரணங்களிற் காண்க :—

(1) புகழ்—(உ - ம்)

"வயஞானம் வல்லார் மருகற் பெருமான்
உயர்ஞா னமுணர்ந் தடியுள் குதலால்
இயன் ஞானசம் பந்தன பாடல் வல்லார்
வியன்ஞால மெல்லாம் விளங்கும் புகழே"

—திருமருகல் - பண் - இந்களம். 11.

(2) இடர் நீங்கல்—(உ - ம்)

"ஒப்பரிய பூம்புகலி யோங்கு கோயின் மேயானை
அப்பரிசிற் பதியான வணிகொண் ஞான சம்பந்தன்
செப்பரிய தண்டமிழாற் றெரிந்தபாட லிவைவல்லார்
எப்பரிசி லிடர்நீங்கி இமையோ ருலகத் திருப்பாரே"

—திருப் பிரமபுரம் - பண் - காந்தாரம். 11.

(3) விண் - மண் : ஆட்சி—(உ - ம்)

"விண்ணிழி கோயில் விரும்பி மேவும் வித்தக மென்கொ லிதென்று சொல்லிப்
புண்ணிய னைப்புக லிந்நிலாவு பூங்கொடி யோடிருந் தானைப் போற்றி
நண்ணிய கீர்த்தி நலங்கொள் கேள்வி நான்மறை ஞானசம் பந்தன் சொன்ன
பண்ணியல் பாடல் வல்லார்க ளிந்தப் பாரோடு விண்பரி பாலகரே"

—திருப்புகலியும் திருவீழிமிழலையும் வினுவுரை. 11.

(4) திருவளர்ச் செம்மை—(உ - ம்)

"எரியொரு வண்ண மாய வுருவானை எந்தை பெருமானை யுள்கி நினையார்
திரிபுர மன்று செற்ற சிவன்மேய செல்வத் திருநாரை யூர்கை தொழுவான்
பொருபுனல் சூழ்ந்த காழி மறைஞான சம்பந்த னுரைமாலை பத்து மொழிவார்
திருவளர் செம்மை யாகி யருள்பேறு மிசக தளதென்பார் செம்மை யினரே"

—திருநாரையூர் - பண் - பியந்தைக் காந்தாரம். 11.

மற்றும் நோயின்மை, பழிபாவம் சேராமை, வல்லமை, தவநலம், நன்னெறி முதலியனவும் பெறல் சில திருக்கடைக் காப்பில் காணப்படுகின்றன.

இச்சந்தர்ப்பத்தில் மறைத்திருவன் - சுவாமிநாத பண்டிதர் அவர்கள் பிரசுரம் செய்த தலமுறைத் தேவாரத் திருமுறைகளின் முகவுரையில் 37-வது பக்கத்தில் "தமிழ்மறைப் பாராயணப் பலன்" என்னும் பாகத்தில், விரித்துரைத்த நன்மொழியை இங்கு கவனிப்போமாக :—

"தமிழ்மறைத் திருப்பதிகங்களுள் சில, சிவஞானத்தைக் கொடுப்பனவும், சில போகத்தைக் கொடுப்பனவும், சில சித்திகளைக் கொடுப்பனவும், சில முத்தி(களைக்) கொடுப்பனவும், சில இவையல்லாத பிற பயன்களைக் கொடுப்பனவுமாக விளங்கும். ஆதலால் புத்தியை விரும்பினோர், அதனை யருளுந் திருப்பதிகங்களையும், முத்தியை விரும்பினோர், அதனை யருளுந் திருப்பதிகங்களையும், இரண்டனையும் விரும்பினோர், அவ்விரண்டனையும் தரும் திருப்பதிகங்களையும் பாராயணஞ் செய்யக்கடவர். திருக்கடைக்காப்புக்

கொண்டு, இவை, புத்தி யளிப்பன ; இவை, முத்தி தருவன ; இவை, சித்தி கொடுப்பன ; இவை, எல்லாந் தருவன வென்று அறிந்துகொள்க'' என்பர் இப்பெரியார். ஆதலால் திருஞானசம்பந்தர் திருக்கடைக்காப்பில் கூறிய சொற்றொடர்கள் தற்புகழ்ச்சிக்கன்று ; அவற்றைக் கைக்கொண்டு மன்பதை ஆய்ந்துணர்ந்து உய்யுமாறே அவர் கருதியதென்பது விளங்கும்.

மற்றும் திருஞானசம்பந்தர் வடமொழியிலும் சிறந்த ஞானமுடையவராதலால், ஆரிய வேத சாகைகளொவ்வொன்றின் முடிவிலும் அவ்வவற்றைக் கூறிய ஆசிரியர்களே நூற்பயனுரைத்தலை நாம் நான்கு வேதசாகைகளினின்றும் காண்கின்றோமாதலால், அம்மரபுக் கேற்பத் திருஞான சம்பந்தரும், தமது பதிகங்களுக்குத் திருக்கடைக்காப்பு கூறினர் என்று நாம் அநுமானிக்கலாம். ஆரிய வேத சாகைகள் அவர் நினைவிலிருந்ததென்பது, பின் வரும் பாசுரத்தால் விளங்கும் :—

“ சாகை யாயிர முடையார் சாமமு மோதுவ துடையார்
ஈகை யார்கடை நோக்கி யிரப்பதும் பலபல வுடையார்
தோகை மாமயி லனைய துடியிடை பாகமு முடையார்
வாகை நுண்டுளி வீசும் வாழ்கொளி புத்தூ ருளாரே ”

—திருவாழ் கொளிபுத்தூர் - பண் - பியந்தைக் காந்தாரம். 1.

# பிறவிக்கடல் நீத்தபிரான்

[சே. சிவஞானம் பிள்ளை]

(மலர் ரு பக்கம் கசசச தொடர்ச்சி)

## திருநாவுக்கரசர் மீண்டும் திருவதிகைக்கு அணைதல்

அமணர்கள் கடலுட் பாய்ச்சவும், திருவைந்தெழுத்தின் நற்றுணையால் உய்ந்துகரையேறித் திருப்பாதிரிப் புலியூரின்கண் தங்கியிருந்த வாகீசப் பெருந்தகையார்க்குத், தம்மை முதலில் சமணப்படுகுழியினின்றும் பரிவுடன் எடுத்தாண்ட திருவதிகை வீரட்டானேசுரரைத் தரிசிக்க வேண்டுமெனும் பெருங்காதல் எழுந்தது. திருவதிகைக்குச்செல்வான் எழுந்த பெருந்தகையார் திருமாணிகுழி, திருத்தினைநகர் முதலிய பல தலங்களுக்குச் சென்று திருப்பதிகம்பாடி இறைஞ்சி திருவதிகையைச் சார்ந்தனர். அதிகைப் பதியின்கணுள்ள அடியார்கள் வாகீசப் பெருந்தகையாரை அன்புடன் வரவேற்றனர். நாவுக்கரையர் அடியார்களுடன் திருக்கோயிலுட் சென்று இறைவனை வணங்கிப் பற்பல பதிகங்கள் பாடித் துதித்து அப்பதியின் கண்ணே சிலநாள் அமர்ந்திருந்தனர். வாகீசப் பெருந்தகையார் கடலிடை அமிழ்ந்துபடாமல் உய்ந்து கரையேறினமையைக் கேட்ட மகேந்திர வர்மபல்லவன் என்னும் சமண அரசன், அதிகைப் பதியை அடைந்து அரசினை வணங்கிச் சைவ மதத்தைச் சார்ந்தனன்; அமண்பாழிகளையும் பள்ளிகளையும் இடித்துத் தள்ளி “குணதரவீச்சரம்” என்னும் சிவாலயம் எடுத்தனன்.

## விடை இலச்சினை ஏற்றல்

திருவதிகையில் எழுந்தருளியிருந்த வாகீசப் பெருந்தகையார்க்கு சிவபெருமான் வீற்றிருக்கும் பற்பல தலங்களைக் காணவேண்டுமெனும் பெருவிருப்பம் எழுந்தது. திருவதிகையினின்றும் புறப்பட்டுத் திருவெண்ணெய் நல்லூர், திருக்கோவலூர் முதலிய தலங்களைப் பணிந்து பதிகம் பாடித் திருப்பெண்ணாகடம் என்னும் திருப்பதியைச் சார்ந்து இறைவனை வணங்கும் வாகீசர் 'புன்னெறியாம் அமண்சமயத் தொடக்குண்டு போந்த உடல் தன்னுடனே உயிர்வாழத்தரியேன் நான் தரிப்பதனுக்கு என்னுடைய நாயகநின் இலச்சினையிட்டருளென்று பன்னு செழுந்தமிழ்மாலை முன்னின்று பாடுவார்' என்னும் அருண்மொழித்தேவர் திருவாக்கின்படி, 'பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம்' என்னும் திருப்பதிகத்தைப் பாடியருளினர். அப்பதிகம் பாடிய அளவில் 'நீடுதிருத் தூங்கானை மாடத்து நிலவுகின்ற ஆடக மேருச்சிலையான் அருளால் ஓர் சிவபூதம் ஆண்டொருவர் அறியாமே வாகீசர் திருத்தோளில் சேடுயர் மூவிலைச்சூலம் சினவிடையினுடன் சாத்த' தம் திருத்தோளிலார்ந்த திருவிலைச்சினையினைக் கண்டு மனமகிழ்ந்து தம்பெருமான் அருள் நினைந்து கண்கள் ஆனந்த அருவி பொழியத் தொழுது விழுந்து ஆர்வத்தால் ஓங்கியசிந்தையராகி உய்ந்தொழிந்தேன் என்று எழுந்தனர் வாகீசர்.

அகச்சான்று 'மின்னாரு மூவிலைச்சூலம் என்மேற்பொறி' 'இடவம் பொறித்தென்னை என்று கொள்ளாய்' என்று தூங்கானைப் பதிகத்தில் வாகீசர் திருவாய் மலர்ந்தருளினமையே பெரியபுராணமுடையார் கூற்றை வலியுறுத்தும். இறைவன் வாகீசர் வேண்டுகோட்கு இரங்கி இலச்சினை பொறித்தமைக்கு அகச்சான்று யாதும் கிடைத்திலது. இத்தகைய அற்புதங்கள் எல்லாம் 'தன்னடியார்க் கருள்புரிந்த தகவு தோன்றும்' என்னும் பதிகத்தில் அடங்கும் போலும். இவ்வற்புதத்தைப் பிற்காலத்துத் தமிழ்ப்புலவர் ஒருவர்,

> ஆலம் பெற்றிருண்ட கண்டத் தண்ணல்பால் நேமிகொள்ளக்
> காலம்பெற்(று) அலர்ஒன்றற் காக்கண் இடுமால் போலாது
> சீலம்பெற்(று) அருமை யாமோர் செந்தமிழ்ப் பதிகம்பாடி
> சூலம் பெற்றுயர்ந்த ஐயர் துணையடி முடிமேல் வைப்பாம்

என்று போற்றியிருப்பது பாராட்டற் பாலதே.

## சிதம்பர தரிசனமும் ஞானசம்பந்தரைத் தரிசித்தலும்

வாகீசர் திருத்தூங்கானை மாடத்தை அரிதினீங்கித் திருவரத்துறை திருமுதுகுன்று முதலிய பதிகளை வணங்கிப் பதிகம்பாடித் திருத்தில்லையம் பதியை அணைந்தனர். தில்லையம்பதியின் கண் உள்ள அடியார்கள் வாகீசரை அன்புடன் வரவேற்றனர். அப்பர் திருத்தில்லையுட் புகுந்து நடராஜப் பெருமானைத் தரிசித்து வணங்கித் திருப்பதிகம்பாடி. அத்தலத்தின் கண்ணேயே சிலநாள் தங்கியிருந்தனர். வாகீசர், சிதம்பரத்தின் கண்ணே தங்கியிருக்கு நாளில் சீர்காழிப் பதியில் ஞானசம்பந்தப் பெருமான் திரு அவதாரஞ் செய்தமையைக் கேட்டு அப்பெருந்தகையாரைக் காணும்பெருவிருப்பால் சீர்காழியைச் சார்ந்தனர். ஆளுடைய அரசர் வருகையைக்கேட்ட ஆளுடைய

பிள்ளையார் அவரை எதிர்கொண்டழைத்தனர். இருவரும் அளவளாவினர். பின்னர் உலகிற்கெல்லாம் அருட்பெருகு தனிக்கடலும் உலகுக்கெல்லாம் அன்பு நிறைகடலும், பொங்கும் பொருட் சமயம் முதற் சைவநெறிதான் பெற்ற புண்ணியக்கண் இரண்டும், புவனம் உய்ய இருட்கடுவுண்டவர் அருளும், அகிலமெல்லாம் ஈன்றவள் தன் திருவருளும் தம்மிற்கூடிச் சென்ற தொப்பத் தெருட்கலை ஞானக்கன்றும் அரசும் கழுமலத்தில் எழுந்தருளியிருக்கும் செஞ்சடைவானவர் கோயில் சார்ந்தனர். ஆளுடைய பிள்ளையாரும் அரசும் பரமர் திருக்கோபுரத்தைப் பணிந்து உள்புக்கு இறைவன் எழுந்தருளியிருக்கும் விமானந் தன்னை வலங்கொண்டு தொழுது விழுந்து எழுந்தனர். சண்பை வருஞானம் பெற்ற பிள்ளையார் அப்பரை நோக்கி 'உங்கள் தம்பிரானரை நீர் பாடும்' என்றனர். அரசும் திருத்தோணிபுரத் திறைவரைக் கசிந்து பாடினர். வாகீசர் பெரிய பெருமாட்டியுடன் தோணிமீது வீற்றிருந்தருளும் பிரான் முன் நின்று திருப்பதிகம் பாடி அரியவகை புறம் போந்து ஞான சம்பந்தப் பெருமான் திருமடத்தில் எழுந்தருளித் திருவமுதுசெய்து பல நாள் காழியம்பதியின் கண் வைகினர்.

## சிவபெருமான் திருவடி சூட்டுதல்

வாகீசப் பெருந்தகையார் ஞானசம்பந்தப் பெருமான் திருமடத்தில் எழுந்தருளி, ஆளுடைய பிள்ளையாருடன் அளவளாவி மகிழ்வுற்றிருக்கு நாளில் சோழநாட்டின்கண் உள்ள சிவதலங்களைத் தரிசிக்க வேண்டும் என்னும் பெருவிருப்பு அவருக்கு உண்டாயிற்று. அவ்விருப்பத்தைக் காழிப் பிள்ளையாருக்குக் குறிப்பித்தனர். அவரும் அதற்கு இசைந்தனர். பிறகு ஆண்ட அரசும், ஆளுடைய பிள்ளையாரும் திருக்கோலக் காவிற்குச் சென்று காளகண்டனை இறைஞ்சி மீண்டனர். மீண்ட பிறகு வாகீசர் பொன்னி நதியின் இருமருங்கிலுமுள்ள சிவத்தலங்களைப் பணிந்து திருச்சத்திமுற்றம் என்னும் திருப்பதியைச் சார்ந்தனர். திருச்சத்திமுற்றத்தைச் சார்ந்த அப்பர் இறைவனை வணங்கி, “பூவாரடிச்சுவடு என்மேற் பொருந்தவை” என்று தாம் பாடிய பதிகத்தில் இரந்து வேண்டினர். சிவபரஞ்சுடர் நல்லூருக்கு வரும்படி அருள்செய்தனர். வாகீசர் நல்லூருக்குச் சென்றபோது அடியார் வேண்டியவைகளை வேண்டியாங்குக் கொடுக்கும் கருணையங்கடல், “உன்னுடையநினைப்பதனை முடிக்கின்றோம்” என்று வாகீசப்பெருந்தகையார் சென்னிமிசை பாதமலர் சூட்டினர். இறைவன் திருவடி சூட்டும் பெருவாழ்வைப் பெற்ற வாகீசர் “நினைந்துருகும் அடியாரை நையவைத்தார்” என்னும் திருப்பதிகம் பாடி நல்லூரிலேயே சில நாள் தங்கியிருந்தனர்.

அகச்சான்று. 'பூவாரடிச்சுவடு என்மேற் பொறித்துவை' என்னும் தொடரினாலே அப்பர் இறைவனை நோக்கித் திருவடி சூட்ட வேண்டினமையும், 'நனைந்தனைய திருவடி என் தலைமேல் வைத்தார் நல்லூ ரெம்பெருமானர் நல்லவாறே' 'காலனை வீழச்செற்ற கழலடியிரண்டும் வந்தென் மேலவாயிருக்கப் பெற்றேன்' என்று திருவாய்மலர்ந்துள்ளமையும் இறைவன் திருவடி சூட்டினமைக்கும் அகச்சான்றுகளாக விளங்குகின்றன. இதனைத் தமிழ்ப் பேர்அறிஞர் ஒருவர்,

முகத்தின்மண் முழு திடந்த முன்னவன் பாதங் காணான்
அகத்தில்தாள் அடைய அங்கை அலர்செறி உழவா ரத்தின்
இகத்தின்மண் மேலி டந்தவ் விறையடி நிலமேற் சூட்டச்
சுகத்தின்நல் லூரிற் பெற்ற தாயரைத் துதித்து வாழ்வாம்.

என்று வியந்து துதித்திருக்கின்றனர்.

## அராவிடம் தீரெனத் தீர்தல்

அப்பர் திருநல்லூரை அரிதின் நீங்கித்திருப்பழனம் முதலிய தலங்களைக் கண்டு இறைஞ்சித் திங்களூர் என்னும் திருப்பதியைச் சார்ந்தனர். அவ்வூரில் அப்பூதியடிகள் என்னும் அந்தணர் பெருமான் தன் பிள்ளைகள், அறச்சாலை முதலியவைகட்கெல்லாம் திருநாவுக்கரசு என்னும் பெயர் வைத்திருந்தனர். இதை உணர்ந்த வாகீசப் பெருந்தகையார், அவரைக் காணுமாறு சென்றனர். அப்பூதியடிகளும் வாகீசப் பெருமானை அன்புடன் வணங்கிவரவேற்று மகிழ்ந்தார்; தம் மாளிகையில் திருவமுது செய்தருளும்படி வேண்டினார். வாகீசப் பெருந்தகையாரும் அவர் வேண்டு கோட்கு இணங்கினர். அப்பூதியடிகளார் மனைவியார் திருவமுது சமைத்து வாகீசரை அமுது செய்விப்பான் வாழைக் குருத்து ஒன்று அரிந்து கொண்டு வரும்படி தன் மூத்த குமாரனுக்குக் கட்டளை யிட்டனர். வாழைக்குருத்து அரியச்சென்ற மூத்த குமாரனை அராத்தீண்டியது. மூத்த புதல்வன் ஓடோடியும் வந்து வாழைக் குருத்தைத் தன் தாயார் கையிற் கொடுத்துப் பூமியில் வீழ்ந்து உயிர் துறந்தனன். இதனை அறிந்தால் தூயவர் அமுது செய்யாரே என்று சவத்தை மறைத்து அவருக்கு அமுது செய்விக்க வேண்டியவைகளை எல்லாம் சித்தஞ் செய்து வைத்தனர் அப்பூதியடிகளும் அவர் மனைவியாரும். அவர்கள் உளத் தடுமாற்றத்தை இறைவன் திருவருளால் உணர்ந்த அப்பர், சவத்தை ஆலயத்திற்குக் கொணர்வித்து, 'ஒன்று கொலாம்' என்னும் பதிகம்பாடிப் பிள்ளையை உயிர்ப்பித்தனர். தாய் தந்தையர் புதல்வன் உயிர்த்து எழுந்தமைக்கு மகிழ்வெய்தாமல், பெரியார் அமுது செய்வதற்குத் தாழ்த்தமைக்காக மனம் வருந்தினர். வாகீசர்அவர் திருமனையில் அமுதருந்தி அங்கேயே சிலநாள் தங்கியிருந்தனர்.

(தொடரும்)

---

## முக்கிய அறிக்கை

திருவாசகம் மூலமும் உரையும் சமாஜ அங்கத்தினர் ஒவ்வொருவருக்கு ஒரு பிரதியாக இரண்டு ரூபா விலைக்கு விற்கப்பட்டு வருகிறது. பல வியாபாரிகள் மொத்தமாகப் பிரதி ஒன்றுக்கு இரண்டரை ரூபா வீதம் விலை கொடுத்து எடுத்துக்கொள்வதாகக் கேட்கிறார்கள். 1933ஞ ஜூன்மீ 10உ வரையில்தான் சமாஜ அங்கத்தினருக்கு ஒரு பிரதி 2 ரூபா விலையென்றும் அதற்குப் பிறகு யாவராயினும் தனிப்பிரதி விலை ரூபா 3. கொடுத்தே வாங்க வேண்டுமென்றும் இதன் மூலம் தெரிவிக்கிறோம்.

இங்ஙனம் :

ம. பாலசுப்பிரமணியன், காரியதரிசி.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உமாபதிசிவனார் திரட்டியருளிய அருள்முறைத் திரட்டு உரை

[மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி. ஏ.]

(மலர் ௬, இதழ் ௨, 56-ம் பக்கத் தொடர்ச்சி)

அப்பொழுது அதற்குச் செம்பொருள் கொள்ளலாம். மடப்பாவை - மடப்பமுள்ள பாவைபோன்றவள் - பார்வதி. 'குலவரையின் மடப்பாவை இடப்பாலான்' என்பதனால் இறைவன் பேருருவுடையவன் என்பது குறிப்பிடப்பட்டது. மலம் கெடுத்து. மலம் - அழுக்கு. அது இங்கே அவாவைக் குறிக்கிறது. திருவள்ளுவ நாயனார், "தூய்மை யென்பதவா வின்மை" என்றார். 364-வது குறள். மாதீர்த்தம் ஆட்டிக்கொண்ட மறையவன் - மாதீர்த்தம் என்பது இங்கே அருளைக் குறிக்கிறது. எவ்வாறு நீரானது உடலினது அழுக்கைக் கழுவித் தூய்மை செய்கிறதோ, அவ்வாறே அருளானது உயிரினது அழுக்காகிய மலத்தை நீக்குதலின் அது நீருக்கு உவமிக்கப்பட்டது. சிவன் கோயில் திருவிழாவின் முடிவில் தீர்த்தம் கொடுத்தல் அருளல் ஆகிய தொழிலைக் குறித்தல் காண்க. ஆட்டிக்கொள்ளுதல் - அருளில் மூழ்குவித்தல். "அருளோக்கிற்றீர்த்த நீராட்டிக் கொண்டாய்" என்று அடிகள் தனித்திருத்தாண்டகம் 8-வது பாட்டிற் கூறியருளினார். மறை என்ற சொல் வேதத்தையும் ஆகமத்தையும் உணர்த்துதலின் "மறையவன்" என்பதற்கு வேதாகமப் பொருளாயுள்ளவன் என்று உரை கூறப்பட்டது. வேதாகமங்களைக் கூறினவன் என்றும் பொருள் கூறலாம். "பிறைதவழ் செஞ்சடையன்" என்பதனால் இறைவனது பேருருள் குறிப்பிடப்பட்டது. சலம் கெடுத்து - சலம் - வெகுளி; கோபம். நம்பி - ஆண்மகனிற் சிறந்தவன்; உத்தமன். நினைக்கப்பெற்று - நினைக்கப் பெற்றதனால் என்று பொருள்பட்டுக் காரணப் பொருட்டாய் வந்தது. 'நினைத்தல்' என்பதற்கு இனங்களான நாவினாலே துதித்தலும் உடலினாலே தொழுதலும் கொள்ளப்பட்டன. உய்ந்த ஆறு (இதுஆகும்)—உய்தல்-பிறவித்துன்பத்தினின்றும் தப்பிப்பிழைத்தல். ஆறு - வழி. அவாய் நிலையால் இது ஆகும் என்ற சொற்கள் வருவித்துப் பொருள் உரைக்கப்பட்டது. ஏ - ஈற்றசை. இப்பாட்டில் 'குலம் கெடுத்து' என்பதனால் செருக்கு ஆகிய மயக்க நீக்கமும், (அவிச்சை) மலம் கெடுத்து என்பதனால் அவா நீக்கமும், சலம் கெடுத்து என்பதனால் வெகுளி நீக்கமும் கூறப்பட்டன. பிரகிருதிமாயாபுவன போக நுகர்ச்சிக்கு ஏதுக்களாயுள்ள அவிச்சை ஆங்காரம் அவா ஆசை வெகுளி என்னும் பஞ்சக் கிலேசங்களும் இங்கே கூறப்பட்ட மயக்கம் அவா (காமம்) வெகுளி என்ற மூன்றில் அடங்கும். (சிவஞான பாடியம் 158-ம் பக்கம் பார்க்க) இம்மூன்று குற்றங்களும் நீங்கினாலொழிய உயிருக்கு உலக போகப்பற்று நீங்கிச் சிவபோகப் பெருவாழ்வு உண்டாகாதாகலின், அடிகள் இவற்றினது நீக்கத்தைக் கூறினார். "காமம் வெகுளி மயக்க மிவைகடிந்—தேமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி - யோமென்னு மோசையினுள்ளே யுறைவதோர் - தாம மதனைத் தலைப்பட்டவாறே" என்று திருமூலரும், "காமம் வெகுளி மயக்கமிவை மூன்றன் - நாமங் கெடக்கெடுநோய்" என்று திருவள்ளுவருங் கூறியருளினமை காண்க. தாழ்ந்தோருக்கெல்லாம் மலங் கெடுத்தும் வல்லானாகியும் இடப் பாலானாகியும் மலங் கெடுத்தும் மறையவனாகியும் சடையினனாகியும் சலங்கெடுத்தும் நலம் கொடுக்கும் நள்ளாற்றான் நம்பியை அடியேன் நான் நினைக்கப்பெற் றுய்ந்தவாறே என முடிபு செய்துகொள்க. இப்பாட்டில் வருகிற தன் ஐகளை அசை நிலைகளாகக் கொள்க. சிவபெருமான் உமாதேவியை இடப்பால் வைத்திருத்தலும் சடையினை உடைத்தாதலும் ஆன்மாக்களுக்கு அருள் செய்தற்குக் கொண்ட தடத்த உருவங்கள். திருநாவுக்கரசு அடிகள் இப்பாட்டில் சிவபெருமான் தன்னை அருளே தாரகமாகக் கொண்டு வழிபடுகிறவர்களுக்குக் காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்று குற்றங்களையும் நீக்கிப் பேரின்ப வாழ்வை அளிப்பன் என்றும் அவ்வாறு தாம் அவனை வழிபட்டதால் பிறவித் துன்பம் நீங்கிப் பேரின்ப வாழ்வு பெற்றார் என்றும் கூறுகின்றார். இவ்வாறு அடிகள் தாம் அடைந்த அநுபவத்தைத் "தன்னைச் சரணென்று தானடைந்தேன" என்ற முதற் குறிப்பு உடைய தேவாரப்பாட்டினும் உலகத்தாருக்கு அறிவுறுத்தி யருளினார்.

## ௫. அருளுரு நிலை

நில்லாத நீர்சடைமேல் நிற்பித்தானை
நினையாஎன் நெஞ்சை நினைவித்தானை
கல்லா தனவெல்லாங் கற்பித்தானைக்
காணா தனவெல்லாங் காட்டினானைச்
சொல்லா தனவெல்லாஞ் சொல்லி யென்னைத்
தொடர்ந்திங் கடியேனை யாளாக்கொண்டு
பொல்லாவென் னோய்தீர்த்த புனிதன் தன்னைப்
புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன்நானே. ௪௫

**(உரை)** *நில்லாத நீர்சடைமேல் நிற்பித்தானை* - (பகீரதனது தவவலியால் விண்ணுலகிலிருந்து மண்ணுலகிற்கு வேகமாய்) வந்துகொண்டிருந்த கங்கை நீர்ப்பெருக்கை ஒரு துளியாக அடக்கித் தனது சடையின்மேல் நிற்கும்படி செய்த ஆற்றலுடையவனும்; *நினையா என்நெஞ்சை நினைவித்தானை* - (கட்டுக்காலத்தில் அறியாமையால்) தன்னை நினையாதிருந்த எனது நெஞ்சில் (கட்டு விடுதலைக் காலத்தில் தனது அருளொளி விளங்கும்படி செய்து) தன்னை இடையறாது நினைக்கும்படி செய்தவனும்; *கல்லாதன எல்லாம் கற்பித்தானை* - அவ்வாறு எனது நெஞ்சை நினைக்கும்படி செய்தமையால் நான் முன் கல்லாதிருந்த அருளினது பெருமையை இப்பொழுது கற்பித்தவனும்; *காணாதனஎல்லாம் காட்டினானை* - அவ்வாறு கற்பித்தமையால் கருவி அறிவினால் நான் முன் அறியக்கூடாத உண்மைகளை எல்லாம் இப்பொழுது அருளறிவால் அறியும்படி செய்தவனும்; *சொல்லாதனஎல்லாம் சொல்லி* - அவ்வாறு அறியச் செய்தமையால் நான் முன் நாவினாற் சொல்லத் தெரியாதன வெல்லாம் இப்பொழுது எனது நெஞ்சில் உணரும்படி செய்தவனும்; *அடியேன் என்னை இங்கு தொடர்ந்து* - என்றும் மீளா அடிமையாயுள்ள என்னை (ஆண்டானாகிய தான்) இவ்வுலகில் தொடர்ந்து வந்து தன்னை நான் தொடரும்படி செய்து; *ஆளாக் கொண்டுஎன் பொல்லா நோய்தீர்த்த புனிதன் தன்னை* - அடிமையாக ஆண்டு அருள் செய்து இதுவரை தன்னை அறியவொட்டாது என்னைப் பற்றிக்கொண்டு எல்லாத் துன்பங்களுக்கும் காரணமா யிருந்த ஆணவ மலத்தை என்னைவிட்டு நீங்கும்படி செய்த தூய்மையானவனும்; *புண்ணியனை* - அறவடிவினனுமாகிய சிவபெருமானை; *நான் பூந்துருத்தி கண்டேன்* - நான் திருப்பூந்துருத்தி என்ற தலத்திலே கண்டு வணங்கினேன்.

**(விளக்கம்)** *நினையாஎன் நெஞ்சை நினைவித்தானை* - நெஞ்சு, உள்ளம் சித்தம், சிந்தை, இதயம் என்பன ஒரு பொருட்சொற்கள். நெஞ்சானது கட்டுக்காலத்தில் ஐம்புலனைச் சார்ந்து கீழ்நோக்கி உலகத்தைப் பற்றுதற்கும், கட்டு விடுதலைக் காலத்தில் ஐம்புலனைச் சாராது மேல்நோக்கிச் சிவத்தைப் பற்றுதற்கும் நடுவான இடம் ஆதலின், 'நினையா என்நெஞ்சம் நினைவித்தானை' என்றார். சிந்தையிற் சிவம் (திருநாவுக்கரசர் தேவாரம்) 'சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி' (திருவாசகம்) சித்தந் திரிந்து சிவமயமாகியே (திருமந்திரம்) என்ற சொற்றொடர்கள் அக்கருத்தினைக் குறிக்கின்றன. *நினையா* - என்பதில் ஈற்றில் தகர உயிர் மெய்தொக்கி நிற்கிறது. கற்பித்தானைக் காட்டினானை சொல்லி தொடர்ந்து - நினைவித்தல், கற்பித்தல், காட்டுதல், சொல்லுவித்தல், தொடர்வித்தல் என்ற செயல்கள் ஒன்றன்பின் ஒன்றாய் முறையே ஏதுவும் பயனுமாய் வருகின்றன. உலகில் ஒருவன் கருவி அறிவைக் கொண்டு ஓர் உண்மையை அறிந்து அவ்வுண்மையைச் செயலில் நிகழ்த்துதற்கு ஓர் ஆசாரியன் அவனுக்கு அதைப்பற்றி நினைப்பூட்டுதலும், கற்பித்தலும், அறிவித்தலும், சொல்லுவித்தலும், செய்வித்தலும் நிகழ்த்துதலை நாம் காண்டல்போல் சிவபெருமான் கட்டுக் காலத்தில்

தனது அருளை அறியாதிருந்த உயிர்க்கு இருவினையொப்பு மலபரிபாகப் பருவம் வந்த பொழுது தனது அருளை இதுவரை மறந்திருந்த உயிர்க்கு அறிவித்தல் கற்பித்தல் சொல்லுவித்தல் செய்வித்தல் ஆகிய தொழில்களை அவ்வுயிரினிடத்தில் நிகழச் செய்கின்றான் என்பது கருத்து. சொல்லி என்பது இங்கே உணரும்படி செய்வது என்று பொருள்படும். அது இங்கே உணர்வித்து என்ற பிற வினைப்பொருளில் வந்தது. அவ்வாறே தொடர்ந்து என்ற சொல்லும் தொடர்வித்து என்ற பிற வினைப்பொருளில் வந்தது. புனிதன் தன்னை - புனிதன் - மலரகிதன். இயல்பாகவே பாசங்களினின்று நீங்கினவன். தன் - அசை. புண்ணியனை - உயிர்களுக்கு நலம்தரும் வினையையே செய்கின்றவன் அறவன். கண்டேன் - காணுதல் என்பது இங்கே அருளால் அறிதலைக் குறிக்கிறது. எ - ஈற்றசை.

ஆட்டு வித்தால் ஆர்ஒருவர் ஆடா தாரே
அடக்கு வித்தால் ஆர்ஒருவர் அடங்கா தாரே
ஓட்டு வித்தால் ஆர்ஒருவர் ஓடா தாரே
உருகு வித்தால் ஆர்ஒருவர் உருகா தாரே
பாட்டு வித்தால் ஆர்ஒருவர் பாடா தாரே
பணி வித்தால் ஆர்ஒருவர் பணியா தாரே
காட்டு வித்தால் ஆர்ஒருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுத லாய்க் காட்டாக்காலே. ௪௬

(உரை) :—(கண்ணுதலாய்) காட்டுவித்தால் - சிவபெருமான் பருவம் வரப் பெற்ற அடியார்களுக்கு அகக்கண்ணைக் கொடுத்து அவர்கள் அந்த அகக்கண்ணால் தனது அருளையும் தன்னையும் அறியும்படி செய்தலாகிய காட்டும் உதவியையும் (அவர்களை விடயத்திற் பற்றும்படி செலுத்திச் சென்று விடயத்திலும் கலந்து நிற்றலாகிய காணும் உதவியையும்) செய்தால்; ஆர் ஒருவர் காணாதாரே - அவனை யார்தாம் அறியாதவர் (எல்லாரும் அறிவார் என்றபடி); கண்ணுதலாய்க் காட்டக்காலே காண்பார் ஆர் - அவன் அவ்வாறு தனது நெற்றிக் கண் மூலமாய்ப் பருவம் வந்த அடியார்களுடைய அகக்கண்ணைத் திறக்கும்படி செய்து காட்டும் உதவியும் காணும் உதவியும் செய்யாவிட்டால் யார்தாம் அவனை அறிவார் (ஒருவரும் அறியமாட்டார் என்றபடி). சிவபெருமான் அவ்வாறு பருவம் வந்த அடியார்களுக்குக் காட்டும் உதவியும் காணும் உதவியும் செய்தமையினால் அவர்கள் அவனை அருள் அறிவால் நேரே அறியும் வலி உடையராயினர் என்னும் உடன் பாட்டினாலும் அவன் அவ்வாறு காட்டும் உதவியும் காணும் உதவியும் செய்யாவிட்டால் ஒருவருமே அவனை அருள் அறிவால் நேரே அறியும் வலியுடையர் களாகார் என்னும் எதிர் மறையினாலும் சிவபெருமான் உதவியின்றிப் பருவம் வந்த அடியார்களும் அவனை அருள் அறிவால் அறிந்து உய்யமாட்டார்கள். (ஆதலின்); அடக்குவித்தால் ஆர் ஒருவர் அடங்காதார்?; சிவபெருமான் அவ்வாறுதான் ஆண்டவன் அவர்கள் தனக்கு என்றும் மீளா அடிமைகள் என்னும் அத்துவித உண்மையை அடியார்களுடைய அருள் அறிவுக்குக் காட்டாகி வேறாக நின்று அறிவித்தலாகிய காட்டும் உதவியைச் செய்தால் யார் தங்களுடைய அறிவு வேட்கை செயல்களை முறையே அவனுடைய அறிவு வேட்கை செயல்களுக்குள் அடங்கும்படி செய்து அடங்காதவர்?; உருகுவித்தால் ஆர் ஒருவர் உருகாதார் - சிவபெருமான் உயிருக்குக் கட்டு நிலை கட்டு விடுதலை நிலைகளிரண்டினும் எப்பொழுதும் அத்துவிதமாய் நின்று செய்து வரும் பேருதவியை அவன் அறிவித்த அருளறிவில் அறிந்த அடியார்கள் அவ்வுதவியை நினைந்து நினைந்து அகங்குழைந்து அவன் மீதூர்ந்த அன்பினால் உருகும்படி செய்தால் யார் உருகாதவர்?; பணிவித்தால் ஆர் ஒருவர் பணியாதார் - சிவபெருமான் அவ்வாறு

அடியார்களுடைய அறிவுக்குக் காட்டாகி நின்று காட்டு முதவியைச் செய்வது மன்றி அவர்களை விடயப் பொருளாகிய தன்னைப் பற்றும்படி இழுத்துத் தன் வசமாக்கிப் பேரின்பமடையும்படி காணும் உதவியையும் செய்தால் யார் அவன் அருளையே தாரகமாகக் கருதி அவ்வருளில் ஒடுங்கி வணங்காதவர்?; ஆட்டுவித்தால் ஆர் ஒருவர் ஆடாதார் - மேலே கூறியவாறு அடங்கின அடியார்களை அந்த அகநிகழ்ச்சி காரணமாகச் சிவபெருமான் புறத்திலும் ஆடும்படி செய்தால் யார் ஆடாதவர்?; பாடுவித்தால் ஆர் ஒருவர் பாடாதார் - மேலே கூறியவாறு உருகின அடியார்களை அந்த அக நிகழ்ச்சி காரணமாகச் சிவபெருமான் புறத்திலும் பாடும்படி செய்தால் யார் பாடாதவர்?; ஓட்டுவித்தால் ஆர் ஒருவர் ஓடாதார் - மேலே கூறியவாறு வணங்கின அடியார்களை அந்த அகநிகழ்ச்சி காரணமாகச் சிவபெருமான் புறத்திலும் ஓடும்படி செய்தால் யார்தான் ஓடாதவர்?;

(விளக்கம்) :—இப்பாட்டில் சிவபெருமான் பருவம் வரப் பெற்ற அடியார்களுக்குச் செய்து வரும் காட்டும் உதவி கூறப்பட்டது. இனம்பற்றி அதனோடு சேர்த்துக் கொள்ளப்படுகின்ற காணும் உதவியும் உரையிற் கூறப்பட்டது. காட்டும் உதவியும் காணும் உதவியும் முன்னைய தேவார உரைகளில் விளக்கப்பட்டன. காட்டும் உதவி காணும் உதவிகளின் பயனாக அடியார்களிடம் அறிவு வேட்கை செயல்களின் நிகழ்ச்சிகளாக முறையே அகத்தில் நிகழ்கிற அடங்குதல் உருகுதல் பணிதல்களும், புறத்தில் நிகழ்கிற ஆடுதல், பாடுதல், ஓடுதல்களும் கூறப்பட்டன. செய்யுளாதலின் முறை பிறழ்ந்து வைக்கப்பட்ட இந்த அகநிகழ்ச்சி புறநிகழ்ச்சிகள் முறைமையின் வைத்துப் பொருள் கூறப்பட்டன. அடங்குதல் உருகுதல் பணிதல் (வணங்குதல்) ஆகிய மூன்று அகநிகழ்ச்சிகள் முறையே ஒன்றுக்கொன்று ஏதுவும் பயனுமாயுள்ளன. "அயரா அன்பின் அரன்கழல் செலுமே (சிவஞான போதம் கக.ம் சூத்திரம்) என்ற முறையில் அடியார்கள் தங்களுக்குச் சிவபெருமான் அருள் அறிவில் அறிவித்ததை அறிந்த அறிவால் அடங்கி, திருந்திய வேட்கையாகிய அன்பினால் அவனிடத்தில் அகங்குழைந்து உருகி, செயலினால் அவனிடம் சென்று இரண்டறக் கலந்து ஒடுங்கிப் பேரின்பமுறும் தன்மை இந்த அகநிகழ்ச்சிகளாற் கூறப்பட்டன. இம்மூன்று நிகழ்ச்சிகளும் அறிவு வேட்கைச் செயல்களின் நிகழ்ச்சிகளாக முறையே ஒன்றுக்கொன்று மிக்க சூக்குமமாகவுள்ளன. அடங்குதலைவிட உருகுதலும், உருகுதலைவிடப் பணிதலாகிய ஒடுங்கி இன்புறுதலும் சூக்குமமாக வுள்ளன. மலம் நீங்கப் பெற்ற அடியார்களுக்கு எடுத்த உடலுள்ள அளவும் புறநிகழ்ச்சிகளும் நிகழும் ஆதலின், ஆடுதல், பாடுதல், ஓடுதல் ஆகிய புறநிகழ்ச்சிகளும் கூறப்பட்டன. ஆடுதல் அறிவின் நிகழ்ச்சியாகவும், பாடுதல் அன்பின் (வேட்கை) நிகழ்ச்சியாகவும், ஓடுதல் செயலின் நிகழ்ச்சியாகவும் முறையே ஒன்றுக்கொன்று ஏதுவும் பயனுமாயுள்ளன. இவைகள் முறையே ஒன்றுக்கொன்று மிக்க தூலமாயுள்ளன. மாணிக்கவாசக அடிகள் "ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கன்பிலை யென்புருகிப் - பாடுகின்றிலைப் பதைப்பதும் செய்கிலை" என்றும், தாயுமான அடிகள் "ஆடுவதும் பாடுவதும் ஆனந்தமாக நின்னைத் தேடுவதும் நின்னடியார் செய்கை பராபரமே" என்றும் இந்தப் புறநிகழ்ச்சிகளைக் கூறியருளினர். அகநிகழ்ச்சி நிகழ்வதாயினும் புறநிகழ்ச்சி நிகழ்வதாயினும் உள்ளும் புறமும் ஒரு தன்மைக் காட்சியாயுள்ள அடியார்கள் பசுபாசப் பொருள்களைப் பாராமல் பதி ஒன்றையே பார்த்திருந்து இன்புற்றிருப்பர். (கண்ணுதலாய்க்) காட்டுவித்தால் - காட்டாக்காலே என்ற சொல்லுக்கு முன்னேயுள்ள கண்ணுதலாய் என்ற அடைமொழி இதற்கும் சேர்த்துப் பொருள் கூறப்பட்டது. கண்ணுதலாய்க் காட்டுதல் என்பது பருவம் வந்த உயிர்க்கு சிவபெருமான் அதன் அகக்கண் (ஞானக்கண்) திறக்கும்படி செய்து அந்த அகக்கண்ணால் அது தன்னை (சிவபெருமானை) அறியும்படி செய்தல் "அங்கவான் ஞானக் கண்ணைக் கொடுத்தருளினாலே - சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன்முனே" என்று சிவஞான சித்தியாரிற் கூறப்பட்டிருத்

தல் காண்க. கண்ணுதலாய்க் காட்டாக்காலே - காட்டாக்கால் - எதிர்மறை வினையெச்சம்; காட்டு-பகுதி; ஆ - எதிர்மறை விகுதி; கால் - வினையெச்ச விகுதி; ஏ - அசை. ஆர் ஒருவர் - ஆர் உயர்திணை முப்பாற்கும் பொதுவான 'யார்' என்ற வினைப் பெயரின் விகாரம்; ஒருவர் - ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் பொதுவான உயர்திணைப் பெயர். ஆர் ஒருவர் - என்ற இரண்டு சொற்களும் ஒரு சொன்னீர்மைப்பட்டு "ஒருவரென்பது உயரிருபாற்குய்ப், பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப" என்ற நன்னூல் சூத்திர விதியால் காணுதார் என்றும், எதிர்மறை உயர்திணைப் பலர் பாற்படர்க்கை வினையாலணையும் பெயர்ச் சொல்லைப் பயனிலையாகக்கொண்டு முடிந்தது. இவ்வாறே பிற "ஆர் ஒருவர்" களுக்கும் கொள்க. ஆர் ஒருவர் காணுதார் என்ற வினு எல்லாரும் காண்பார் என்ற பொருள்பட நின்றது. இவ்வாறே ஆர்ஒருவர் அடங்காதார் முதலியவைகளுக்கும் கொள்க. காணுதார் முதலியவற்றிலுள்ள ஏக்கள் அசை நிலைகள்.

எல்லியும் பகலு மெல்லாந் துஞ்சுவோர்க் கொருவர் வந்து
புல்லிய மனத்துக் கோயில் புக்கனர் காம னென்னும்
வில்லிஐங் கணையி னுனை வெந்துக நோக்கி யிட்டார்
அல்லியம் பழன வேலி அதிகைவீ ரட்ட னுரே. ௪எ

(உரை) காமன் என்னும் (பெயரிய)—காமன் என்று சொல்லப்படும் பெயரை உடையவனும்; வில்லி - வில்லையுடையவனும்; ஐங்கணையினுனை - தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்ற ஐந்து பூக்களையும் அவ்வில்லில் வைத்து எய்கின்ற அம்புகளாக உடையவனும் ஆகிய மன்மதனை; வெந்து உக நோக்கி இட்டார் - அவன் உடல் எரிந்து அழியும்படி தமது நெற்றிக் கண்ணினுலே தீ எழப் பார்த்தவரும்; அல்லியம் பழனவேலி - ஆம்பல் மலர்கள்பூக்கும் அழகிய வயல்களை வேலியாக உடைய; அதிகை வீரட்டனுர் - அதிகை வீரட்டானம் என்ற தலத்தில் திருக்கோயில் கொண்டருளி யிருப்பவரும் ஆகிய சிவபெருமான்; எல்லியும் பகலும் துஞ்சுவோர் ஒருவர்க்கு - (திரோதமலம் வயப்பட்ட கட்டுக்காலத்தில்) இரவும் பகலுமாகிய எல்லாக் காலங்களிலும் தமது அருளை மறந்து தூங்குகின்ற ஒருவாது; புல்லிய மனத்து - பிரியாமலிருக்கிற உள்ளத்தில்; கோயில் புக்கனர் - அவர் கட்டு நீங்கித் தமது அருளை நேரே அறியும் பருவம் வந்தகாலத்தில்) தாம் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலாக அருள் ஒளியுடன் விளங்கினுர்.

(விளக்கம்) காமன் என்னும் - என்னும் - என்று சொல்லப்படும் - தெரிநிலை வினைப் பெயரெச்சம்: என்னும் என்ற சொல்லுக்குப்பின் தொக்கி நின்ற பெயரிய என்றசொல் வருவித்துப் பொருளுரைக்கப்பட்டது. வெந்துஉக நோக்கி இட்டார் - என்பதனுல் தம்மைச் சேரும் அடியாரிடத்து மன்மதனைச் சேரவொட்டார் என்பது குறிப்பிடப்பட்டது. வெந்து உக - தீயினுல் வெந்து பொடியாய்ச்சிந்த; நோக்கி இட்டார் - நோக்கினுர்; இடுதுணைவினை. எல்லியும் பகலும் எல்லாம் துஞ்சுவோர்க்கு ஒருவர் - துஞ்சுவோர்க்கு ஒருவர் என்பதைத் துஞ்சுவோர் ஒருவர்ச்கு என மாற்றி உரை நடை செய்க. ஒருவர்க்கு - வேற்றுமை மயக்கம். ஆறும் வேற்றுமைப் பொருளில் வந்தது. துஞ்சுதல் - திரோதமலம் வயப்பட்ட கட்டுக் காலத்தில் சிவபெருமானது அருளை முற்றிலும் மறந்திருத்தல்; ஒரு காலத்திலாவது நினைக்கமாட்டார் என்பார் எல்லியும் பகலு மெல்லாம் துஞ்சுவோர் ஒருவர் என்றுர். எல்லாம் - முழுவதும். புல்லியமனத்து - எப்பொழுதும் பிரியாதிருக்கிற மனம்; எல்லா உயிர்களுடைய உள்ளத்திலும் நீங்காது இருக்கின்றவர் என்பார் 'புல்லிய மனம்' என்றுர். புல்லிய என்ற சொல்லுக்கு இழிவான என்றும் பொருள் கூறலாம். "நிலவாத புலாலுடம்பில் நிற்ப தொத்து நிலையில்லா" உள்ளம் ஆதலின் அவ்வாறு கூறினுர் என்று கொள்ளுதலும் பொருந்தும்; மனம் + அத்து - மனத்து அத்து - சாரியை; கோயில் புக்கனர் - புறத்தே திருக்கோயில்

கொண்டருளுதல் போல உள்ளத்தில் ஒளியாக விளங்கினர் - தாம் உயிருக்கு எக்காலத்திலும் உதவி செய்யும் பொருளைப் பருவம் வந்த உயிர்க்குத் தெரியும்படி செய்தார் என்பார் கோயில் புக்கனர் என்றார். தமது திருவருளை முற்றிலும் மறந்து உலக நுகர்வுகளை நுகர்ந்துகொண்டிருக்கின்ற திரோத மலம் வயப்பட்ட உயிருக்குச் சிவபெருமான் பருவம் சேரப்பெற்ற காலத்தில் அத்திருவருள் அதற்கு விளங்கும்படி அதனது உள்ளத்தில் ஒளியாக விளங்குகிறார் என்ற உண்மை இப்பாட்டிற் கூறப்பட்டது.

துஞ்சும் போதுஞ் சுடர்விடு சோதியை
நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதியை
நஞ்சு கண்டத் தடக்கிய நம்பனை
வஞ்சனேன் இனி நான்மறக் கிற்பனே. ௨௮

(உரை) :—துஞ்சும்போதும் - திரோதமலம் வயப்பட்டு உயிர் திருவருளை மறந்து தூங்குங் காலத்திலும்; (நெஞ்சுள் நின்று) சுடர்விடு சோதியை (அதனுடைய (உள்ளத்தில்) நிலையாக நின்று தமது அருளொளியை வீசிக்கொண்டிருக்கும் பேரொளிப் பொருளாயிருக்கிறவனும்; நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதியை - அதனுடைய உள்ளத்தில் நிலையாக நின்று நன்று இது தீது இது என்று நினைக்கும்படி செய்த நடுநிலைப் பொருளாயிருப்பவனும்; நஞ்சு கண்டத்து அடக்கிய நம்பனை - தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த காலத்து அதனின்றெழுந்த நஞ்சை அவர்கள் உய்யும்படி தமது கண்டத்தில் அடக்கிவைத்த அன்பனாயிருக்கிறவனும் ஆகிய சிவபெருமானை; வஞ்சனேன் நான் - வஞ்சகனாகிய நான்; இனி - (சிவபெருமானால் ஆண்டருளப் பெற்ற காலத்துக்கு முன் அவனை நான் மறந்திருந்தது போல்) அவனால் ஆண்டருளப் பெற்று அவனது அருளையும் அவனையும் அறிந்த பின்னும்; மறக்கிற்பனே - என்றால் மறக்க முடியுமோ ?

(விளக்கம்) :—துஞ்சும்போதும் - துஞ்சுதல் என்பது திரோத மலம் வயப்பட்டுத் திருவருளை முற்றிலும் மறந்திருத்தல். உம் இறந்தது தழீஇய எச்சம் அது திரோத மலம் நீங்கின காலத்தில் அவன் அதனுடைய உள்ளத்தில் ஒளி விளக்கம் செய்துகொண்டிருக்கிறது மல்லாமல்" என்ற பொருளைக் குறிக்கின்றது. நெஞ்சுள் நின்று சுடர்விடு சோதி - நெஞ்சுள் நின்று என்ற சொற்றொடரை சுட்டுவிடு சோதியுடனும் நினைப்பிக்கும் நீதியுடனும் கூட்டுக. எப்பொழுதும் உயிரினுடைய நெஞ்சில் அருளொளி விளங்கினாலும் அது பிறவிக்குருடன் பகலவன் ஒளியை அறியாதிருத்தல் போலக் கட்டுநிலையில் அவ்வொளியை அறியமாட்டாது என்பார் "துஞ்சும்போதும் சுடர்விடு சோதியை" என்றார். நினைப்பிக்கும் நீதி - சிவபெருமான் நீதி உருவனாதலின் எல்லா உயிர்களுடைய உள்ளத்தில் நின்று நன்று தீது அறிவிக்கும் உள்ளச் சான்று (Conscience)ஆயிருக்கின்றான் என்பது கருத்து. "நீதிபலவும் தனதுருவாமென மிகுத்தவசிதியோடு தானமர்விடம்" என்று திருஞானசம்பந்த அடிகள் திருவைகாத் தேவாரப் பதிகம் 4-வது பாட்டிற் கூறியருளினார். திருநாவுக்கரசு அடிகள் "நானேது மறியாதே என்னுள் வந்து நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய்" என்று திருவானைக்காத் திருத்தாண்டகம் 2-வது பாட்டிற் கூறியருளியதும் காண்க. நஞ்சுகண்டத்து அடக்கிய நம்பன் - நம்பன் என்ற சொல் நண்பன் என்பதன் மரூஉ; அன்பன். பகரத்துக்கு முன் ணகர வொற்றுக்குப் பதிலாக அதன் இனவெழுத்தாகிய மகர ஒற்றுவந்தது. வன்பு, வம்பு எனவும், மேன்பாடு மேம்பாடு எனவும் வருதல்காண்க. தண்பு என்ற சொல் உலக வழக்கில் தம்பு என வருதலுங் காண்க. வஞ்சனேன் - வஞ்சம் பொய். திருநாவுக்கரசு அடிகள் தாம் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பெற்ற காலத்திற்குமுன் பொய்ச்சமயமாகிய சமண சமயத்திலிருந்தமையை நினைந்து தம்மை 'வஞ்சனேன்' என்று கூறினார். இனி மறக்கிற்பனே - கில் - ஆற்றல் உணர்த்தும் ஒரு இடைநிலை; ஏ - வினா - எதிர்

மறைப்பொருள் தந்தது. சிவபெருமானால் ஆட்கொள்ளப்பெற்று அவனை நான் நினைப்பும் மறப்பும் அற்ற நிலையில் எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்கும் பொழுது நான் எவ்வாறு மறக்கமுடியும்? என்று அடிகள் கூறினார். "தன்னை அறிவித்துத் தான்றனைச் செய்தானைப் பின்னை மறத்தல் பிழை" என்ற சிவஞான போதம் கஉ-ம் சூத்திர வெண்பாக் கூறுதல் காண்க. இப்பாட்டில் 'சுடர்விடுஞ் சோதி' என்பதனால் சிவபெருமானுடைய சத்துத் தன்மையும் 'நினைப்பிக்கும் நீதி' என்பதனால் அவனுடைய சித்துத் தன்மையும் நஞ்சுகண்டத் தடக்கிய நம்பன் என்பதனால் அவனுடைய ஆநந்தத் தன்மையும் குறிப்பிடப்பட்டன. சச்சிதானந்தம் ஆகிய சிவபெருமான், தனது சத்துத் தன்மையினால் உயிருக்கு ஒளி விளங்கவும், தனது சித்துத் தன்மையினால் உயிருக்கு அறிவு விளங்கவும், தனது ஆநந்தத் தன்மையினால் உயிருக்கு ஆநந்தம் விளங்கவும் செய்கின்றான் என்ற உண்மை கூறப்பட்டது.

உயிரா வணமிருந் துற்று நோக்கி
உள்ளக் கிழியின்உரு வெழுதி
உயிரா வணஞ்செய் திட்டுன் கைத்தந்தால்
உணரப் படுவாரோ டொட்டிவாழ்தி
அயிரா வணமேறா தானே றேறி
அமரர்நா டாளாதே ஆரூராண்ட
அயிரா வணமே என்னம்மா னேநின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே. சகூ

(உரை) :—அயிராவண மேறாது = கைலாயத்திலுள்ள யானைமேலேறாது ; ஆனேறேறி = எருதின்மேலேறி ; அமரர் நாடாளாதே = விண்ணுலகத்தை ஆளுதல் செய்யாது ; ஆரூராண்ட = திருவாரூரை யாளுதல் செய்த ; ஐராவணமே = பிருதிவி மூர்த்தியே (நில உருவினனே) என்னம்மானே = எனது தந்தையே ; உயிராவணமிருந்து = மூச்சு (வெளியே) விடாமலிருந்து, அதாவது, மூச்சு அடக்கி ; உற்று நோக்கி = அசையாமற் பார்த்த வண்ணமே பார்த்துக்கொண்டிருந்து ; உள்ளக்கிழியின் = உள்ளமாகிய துணியில் ; உருவெழுதி = (உனது அடிகளுடைய) வடிவம் எழுதி ; உயிராவணம் = உயிராகும் தன்மை உண்டாகும்படி ; அதாவது, தன் முனைப்பு இல்லாதபடி ; உன் கைத்தந்தால் = உன் வசம் ஒப்புவித்து விட்டால்; உணரப்படுவாரோடு = நீ உயிருடைய தன்வய மின்மையை அதற்கு உணர்த்தி உன்னால் அவ்வுண்மை உணரப்பட்ட உயிரோடு ; ஒட்டி வாழ்தி = இரண்டற (உயிருடன்) சேர்ந்து கலந்து அதற்கு உன்னுடைய பேரின்பத்தைக் கொடுத்து வாழச் செய்கின்றாய் ; நின்னருட் கண்ணால் நோக்காதார் = ஆதலால் இவ்வாறு நினது அருளை அடையாதவர்கள் ; அல்லாதாரே = மக்களாய்ப் பிறந்தும் மக்கள் அல்லாதவர்களாவார்கள்.

(விளக்கம்) அயிராவணம் (ஐராவணம்) என்பது கைலாய மலையிலுள்ள இரண்டாயிரம் கொம்புகளுடைய ஒரு யானை. 'அயிராவணமேறாது ஆனேறேறி அமரர் நாடாளாதே ஆரூராண்ட' என்பது "வான்பழித் திம்மண் புகுந்து மனிதரை யாட்கொண்ட வள்ளல்" என்று மாணிக்கவாசக சுவாமிகள் கூறிய வண்ணம் விண்ணுலகத்தை விட்டு இம் மண்ணுலகத்துக்கு வந்து உயிர்களை யாட்கொள்ளும் சிவபெருமானுடைய அருட்டிறம் கூறுகின்றது. உயிராவணம் - உயிர்த்தல் என்பது மூச்சுவிடுதல். உயிராவண்ணம் - மூச்சு விடாதபடியிருத்தல், இது பிராணாயாமம் என்று கூறப்படும் யோகத்துக்குரிய எட்டு உறுப்புகளில் ஒன்று. உள்ளத்தை அடக்குதற்கு மூச்சடக்கம் (பிராணாயாமம்) துணையாயிருக்கின்றது. "மன்மன மெங்குண்டு வாயுவுமங்குண்டு" என்றார் திருமூலர். உற்றுநோக்கி - என்பது நுண்ணிதாய்ப் பார்த்த வண்ணமே பார்த்துக்கொண்டிருத்தல்

அதாவது, மனதைப் பிறபொருளிற் செல்லாமற் றடுத்துத் தியானப் பொருளைப் பார்த்துக்கொண் டிருக்கும்படி நிறுத்துதல். உணரப்படுவார் - ஒருவர் தியானத்தால் சிவபெருமானுடன் ஒன்றித் தன்வய மழிந்தபொழுது அவர், தான்என ஒரு முதலாக நின்று உணராததால் உணரப்படுவாரோடு என்று அடிகள் செயப்பாட்டு வினையாற் கூறினர். ஒட்டிவாழ்தி - ஒட்டிவாழ்தல்; சிவபெருமானுடன் இரண்டற (அத்துவித மாய்)க் கலந்து அவனது திருவடி இன்பத்தை நுகர்தல். உலகிலுள்ள சில நெறிகள் போல்சிவ நெறியானது அறிவு நூலில் வெளிப்படுத்தப்பட்ட உண்மைகளை நம்பி ஒழுகுகிற வெறுங்கொள்கை நெறி (Theoretical Religion) அன்று. சைவர் ஒருவர் அருள் நூல்களைக் கற்று ஐயந்திரிபு அறம்படி தெரிந்தார் வாயிற்கேட்டும் சிந்தித்தும், பின் பக்குவம் வந்தகாலே இறைவனால் அதிட்டிக்கப்பெற்ற குரவனுடைய உபதேச உண்மை மொழியைக் கேட்டும், கேட்ட உண்மையைத் தனது உள்ளத்தில் பற்றும் படிச் சிந்தித்தும், சிந்தித்த உண்மையைத் தன்னுள்ளே தானாகத் தெளிந்தும், தெளிந்த உண்மையை நிட்டைகூடி இறைவனுடன் இரண்டற ஒன்றிப் பேரின்பம் நுகரச்செய்யும் நடைநெறி (Practical Religion) இந்நடைச் சிவநெறி (Practical Saivaism) சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் முறையே ஒன்றுக்கொன்று மேற்பட்ட நாலுநிலைகளை உடையது. ஒவ்வொரு நிலையிலும்நாலு நிலைகள் உள. இந்தஅருமைத் தேவாரப்பாட்டில் திருநாவுக்கரசு அடிகள் யோகத்தைக் கூறுகின்றார்.

அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும்
அருமருந்தை யகன்ஞாலத் தகத்துள்தோன்றி
வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன் களகத்தடக்கி மடவாரோடும்
பொருந்தணை மேல்வரும் பயனைப்போக மாற்றிப்
பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்
பெருந் துணையைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவாநாளே. ௫௦

(உரை) :—அருந்துணையை=(அடியாரல்லாதார்க்குத்) துணையல்லாதவனா யிருப்பவனும்; அடியார்தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தை—அடியார்களுடைய துன்பங்களாகிய பிறவி நோயை நீக்குதற்குப் பெறுதற்கு அரிய மருந்து போன்றிருப்பவனும்; அகல் ஞாலத்து அகத்துள்=பரந்த நில உலகத்தினிடத்து; தோன்றி வரும் துணையும் சுற்றமும் பற்றும் விட்டு=உண்டாகி யிருக்கின்ற மனைவி மக்கள் உடன் பிறந்தார் முதலிய உறவினர்கள் பற்றும் ஏனைய உறவினர்கள் பற்றும் உலகப் பொருட்பற்றும் நீங்கி; வான்புலன்கள் அகத்து அடக்கி=வலியுள்ள ஐம்புலன்களையும் வெளியே விடயங்களிற் செல்ல வொட்டாது தடுத்து; மடவாரோடும் பொருந்து அணைமேல் வரும் பயனைப் போக மாற்றி=பெண்களோடும் சேர்கின்ற படுக்கை மேலிருந்து நுகரும் சிற்றின்ப நுகர்ச்சியை (தமது உள்ளத்தை) விட்டுப் போகும்படி ஒழித்து; பொது நீக்கி=(சிவபெருமானை அவன்) உலகில் விளங்கும் பொது இயலில் வைத்து வழி படுதலை நீக்கி; தனை நினைய வல்லோர்க்கு=அவனது உண்மை நிலையில் வைத்து நினைத்துச் சிறப்பாக வழிபடும் ஆற்றலுடையவர்களுக்கு; பெருந்துணையை= ஒப்பற்றதோர் பெரிய துணையாயிருப்பவனும்; பெரும்பற்றப் புலியூரானை=திருப்பெரும் பற்றப் புலியூரில் எழுந்தருளி யிருப்பவனும் ஆகிய சிவபெருமானைப் பற்றி; பேசாத நாளெல்லாம்=எந்த நாட்களில் நாம் (அடியார்கள்) பேசவில்லையோ அந்த நாட்களெல்லாம்; பிறவாநாளே=(தோன்றின நாட்களாயிருந்தாலும்) தோன்றாது வீணே பயனின்றிக் கழிந்த நாட்களே யாகும்.